உ

ஸ்ரீ நாராயணன் துணை

# "திருநாராயண அந்தாதி II"

# "திருநாராயண அலங்காரம்"

# "திருநாராயணக் கவசம்"

*திருமலை/திருப்பதிதேவஸ்தான நிதி உதவி பெற்ற நூல்*

## தெருப்பாடகன்

நாணா பதிப்பகம்

தெருப்பாடகன் M.S. குமார் B.Sc.,
பத்திரம் எழுதும் முத்தமிழ் வித்தகர்,
நிறுவனர், பொதுசெயலாளர்
முத்தமிழப் பண்பாட்டுக்கழகம்,
திருவண்ணாமலை மாவட்டம், [illegible]
கழக மாணவரணிச் செயலாளர்.
தலைவர் பத்திர, நகல் எழுத்தாளர்கள் நலச் சங்கம்.
(பதிவு எண் 32/98 )
திருவண்ணாமலை.
77. இராமலிங்கனார் முதன்மைச்சாலை,
திருவண்ணாமலை மாவட்டம்.
திருவண்ணாமலை - 606 602.
ஆவண எழுத்தர் உரிமம் எண் A/ 1806/T.V.M/99
நகல் எழுத்தர் உரிமம் எண் A/2044/TVM/99

முதற பதிபபு : 1999

This book is published with the Financial Assistance of Thirumala - Thirupathi Devasthanam under their Scheme aid to Publish Religious book.

விலை : **36-00**

அசசிடடோர் :

***துரை அச்சகம்***

150, செங்கம் ரோடு,

திருவண்ணாமலை - 606 603.

☎ : 26405

**email : premcc@md4.vsnl.net.in**



# வாழ்க்கைக் குறிப்பு

இயற்பெயர் : M.S. குமார்.
புனைப்பெயர் : கவிஞர் தெருப்பாடகன்.
பிறந்த ஆண்டு 18-8-1955.
பிறந்தஊர் திருவண்ணாமலை.
பிறந்தமாவட்டம் . திருவண்ணாமலை.
வெளியான
எழுத்துக்கள் ஸ்ரீலங்காவின் பீபா ரேடியோ நிலையத்தில் 150 நாடகங்கள்,C B S A மூலம், சாந்தோம் கம்யூனிகேஷன்ஸ் மூலம் 100 ரேடியோ நாடகங்கள்.
படிப்பு : B.Sc., ( இளமறிவியல் பட்டப்படிப்பு )

இவர் முனுசாமிப்பிள்ளை. சகுந்தலா அம்மாள் தம்பதிகளுக்கு, தன் தமக்கை தவமணி அவர்களுக்கு இளையவராகப்பிறந்தவர். பெற்றோருக்கு 3வது குழந்தை. இவர்மனைவியின் பெயர் சரஸ்வதி, சரண்யா, சூர்யா என்கிற இரு மகள்களும், நாராயணன் என்கிற ஒரு மகனும் உள்ளனர். தெருப்பாடகன் , விடுதலை என்கிற இரு காவியங்களையும், திருநாராயண அந்தாதியில் 1009 பாடல்களையும், தனிக் கவிதைகளாக 2000-க்கும் மேற்பட்ட கவிதைகளையும் எழுதியுள்ளார், சினிமாவிலும் கொஞ்சம் அனுபவம் உண்டு தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பல தடவை பங்கு பெற்றுள்ளார், தமிழை நேசிப்பவர். நாராயணனை சுவாசிப்பவர். நல்ல உள்ளங்களை விசுவாசிப்பவர் இவர்.



ப. சிவகுமார பி.எஸ்ஸி., பி.எல்.,
நிர்வாக அலுவலகம் ,
ஸ்ரீ அருணாசலேசுவர திருக்கோவில்,
திருவண்ணாமலை

திரு எம். எஸ்.குமார் என்கிற தெருப்பாடகன் எழுதிய திருநாராயண அந்தாதி நான்கு வரி அமைப்புள்ள 1009 பாடல்கள் எளிய தமிழில, பாமர மககளுக்கும் புரியக்கூடிய வகையில் எழுதபபடடுள்ளது. அன்னாருடைய புலமை இப்பாடல்களை இயற்றி உள்ளவிதத்தில் இருந்து நன்கு புலனாகிறது. பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றான, அக்னி சிவ ஸ்தலத்தில் பிறந்த அன்னார், வைணவத்தில் புலமையோடு எல்லாம்வல்ல ஏழுமலையானை அந்தாதி மூலம் பாடியிருப்பது, ஒரு அரிய செயலாகும். அன்னார் மேலும் மேலும் புகழ்பெற்று, இமமாதிரி பாடல்கள் புனைந்து இறைவனுக்கு தொண்டு செய்ய இதன் மூலம் எல்லாம் வல்ல உண்ணாமலை உடனுறை அருள்மிகு அண்ணாமலையாரை வேண்டுகிறேன்.எனவே திருமலை திருப்பதி தேவஸ்தான நிதி உதவி பெற்று, இப்புத்தகத்தை வெளியிட்டால் ஆன்மீகத்தில் பெருந்தொண்டு செய்த பெருமை தேவஸ்தானத்தை சாரும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை என தெரிவித்துக்கொள்கின்றேன்.

ப. சிவக்குமார்.

Sri .Srinivasa Ramanujachariar
Hereditory Trustee
Sri Thiruvikramaswamy Devasthanam.
Sri Emberumanar jeeyar Madathipathi
Tirukoilur - 605 757.

Live the Name of Narayana :
Live the Name of Ramanuja :

Dear Devotees of Religion ,

Our Lord Sri lumpathy Sriman Narayana makes His glorious presence in the following five stages of param, Viugam, Shabavam, Antharyami and Archai. Sages, Alwars and Achariyas do concelebrate. These in a grand manner. Alwar has written so that the Lord has kept the person of Athianjothi there and was born here. He takes incanations from Heaven. First the Lord has taken the incarnations of Ram and Krishna terms Vibavatharam and then he takes the incarnations termed Archavatharam.

In the beginning Alwars were born and presented the religion in rich Tamil and in the beautiful instrument of three Chapters of Anthathis. But Anthathi we mean that the ending word of the first Quarter ( Pasuram ) woned be the beginning word of the folliwing quarter ( Pasuram ) Many poets have sung Anthathis in Tamil.

But M.S.Kumar of Thiruvannamalai has composed 1009 quarters of Verses so wondefully and exceptionaly on Lord Narayana and named it as Sri Narayana Anthathi, Which has to be really commended. His humility is also commendable, he calls himself a Theruppadagan (Streer Singer ) for many years, he should have lived in unisom with his mind. soul and body along with Lord Narayana.This Sri.Narayana Anthathi by M.S. Kumar of Thiruvannamalai is due to the grace of lord Narayana Himself. By the grace of the deity who presents herself on the lotus, he must develop and compose many more garlands of poetries and Anthathis. It should multiply in tens, hundreds and thousands.

I institute this Mangalasasnam just after worshipping the feet of lord Sri Ponngaval Aayan (Krishna )

Illumine. Illumine With many more blessing,

**SRI. SRINIVASA RAMANUJACHARIAR.**

# PREFACE

The Songs are revelation of devotion and exposition of emotions.

I do not belong to the family of devotion. Ido not know what is orthodxy and its philosophies . I am just one among the common citizens. Why ? Ido not know how to be denoteful, such a ordinary class I belong to.

I have not learnt any literature on devotion. My Poverty, Oppressive disesses. The learned of the people. World's truths, All these are the sole reasons for the birth of lords Narayana's Anthathi. All these songs mostly, are emotions - amalgamated - Stand wearing devotion - shirts, and they are the Channels of Compassion. Theses Anthathi are the verses of the foundation alter of Self confidence. There may not be grammar, yet they are colourful festoons of largess of Heart Human culture and humanism let Thirupathi, The Seven Hills funds the Puplication of these verses, Let the common people, the illiterates and the innounts sing the Lord's Anthathi. Let me secure the benefit of my birth and turnout and compose many more verses. Let Lord Narayana's assistance deseened upon me.

I have been writing these verses over 15 years under different times and situation.You may find perhaps differing points. words without three dimensions and repetitions, There may not be grammar but you can witness a feeling of devotion being given an up swing. The grammar of Anthathi the ancient rule is strickly followed, the word that ends in an Anthathi be comes the starting word of the next line ( Anthathi ). All the other rules devotion to our Lord Narayana. Whatever may be Tamil and the over whelming dovotion devotion to Narayana will be there for ever and ever. That devotion alone will make live for ever. I offer thanks and thanks alone.

Yours Sincerely.

STREET SINGER

## SYNOPSIS OF THE SCRIPT :
## SRI. NARAYANA ANTHATHI
## THERUPADAGAN ( STREET SINGER )

All the 1009 verses of Sri . Narayana Anthathi are sungout in fine different chapters. The authour took 15 long years to compose them . Over these years the author was fully enjoying the bliss of Sri Narayana Anthathi. In simple beautiful Tamil, the author speaks out so that the Anthathi becomes comprehensille even to the absurd illiterate common citizens. The following are the fine differnt chapters.

1). To have considered that Lord was fully indifferent towards poverty and the diseases of the devotee and the Lord forsook him and hard not liberated from the pains of the world.

2). The teachings of the world he has learnt from the teachings and the actions that consequently followed. How the Lord cane to the succour of the devotee to channeliz and the inner feelings out of such great help.

3). To think and worship the Lord that he along can Channelize our emotins, to feel angry, and be compassionate. To think of Lord as oneself and eager to see the inner self of the Lord .

4). How the lord made the author excited and sponsored the bliss of cestasy and its stages. Deepened in material pleasures. The relationship between the devotee and the Lord, the best of its king, rather than the world by pleasures. To have known this truth, Lord Narayana's complete participation and grace to its maximum. The individual who steps on the path of devotion should know the methods of workship and hymnal praises.

5). How the authour considers him a dead stone, wood or mud, and how Lord Narayana enters the same and bestows life to it becomes life (Jeevan ) and Lord Narayana becomes the Lord God ( Paramathma). How the Lord enters the clay of which Ganesha idol is made. The clay idol becomes the life (Jeevan ) and the Lord Narayana becomes the God (Paramatma). The relation between the life and the God was actually made out

of emotional integration. Within themselves out of their known methods, the cultivated habitual feelings, relationships, the commendable way that the world accepted this culture, how it has been revealed, rejection, certain feelings of the effect of those experiences, the stages in the way is Lord Narayana Himself. To have Known this ultimate fact.

The fine different chapters of integrated emotions are out-bursts in 1009 verses of the multi coloured flower -garden of Sri. Narayana Anthathi.

Yours in devotion
***THERUPAADAGAN* ( STREET SINGER )**

உ
ஸ்ரீ. நாராயணன் துணை.

# என்நோக்கு

தெருப்பாடகன் ...

சூரியனில் குளிச்சியில்லை . நிலவுக்கு நிழலில்லை. மனித மனத்திற்கு வெட்கமில்லை முதலிரண்டு எப்படி உண்மையோ, அப்படியே மூன்றாவதும் ஆகும்.திறனாய்வாளர்கள், மேதைகள், சாதனையாளர்கள் யாருமே இதுவரைப் புரிந்துகொள்ள முடியாத ஒன்று உண்டென்றால், அது மனிதமனம்! ஆம் இதன் ஆழம் அறிந்தவர் எவருமில்லை. எந்த அனுபவமும். ஆர்வமும் மனிதமனத்தின் உணர்ச்சியின் ஓரிரு வெளிப்பாட்டை உணருமேயன்றி, முழுமையாக அறியமுடியாது. அனுபவம் என்பது பழக்கத்தின் பழக்கமே. அதே பழக்கம் ஓர் இலட்சியத்தோடு, நல்ல குறிக்கோளோடு, ஒரு நல்ல மனிதனால் வழிநடத்தப்பட்டு, வெற்றி சாதனையாகிறது. அதைச் செய்தவன் சாதனையாளனாகிறான்.

மேற்கண்ட அனைத்தையும் நாம் ஒப்புக்கொண்டால் இந்த என்னுடைய திருநாராயண அந்தாதி -II ம் நூலும் ஓர் சாதனையை நோக்கி நடைபோடும் என்றே என் மனத்தில்படுகிறது. சுமார் 2000 தனிக்கவிதைகளும், சில T.V. நாடகங்களும் இன்னும் சில ஆக்கங்களும் இந்தச் சிறியேன் மூலம் உலகில் ஒரு தமிழிலக்கியத்தின் தொண்டாக தமிழுலகம் ஏற்றுக்கொண்டால், தெருப்பாடகன் என்கிற ஒரு தமிழனின் ஆத்மா, திருநாராயண அந்தாதி I, மற்றும் II நூல்கள் மூலம் திருப்தியுற்றிருக்கும் என்பதே பட்டவர்தனமான உண்மை.

என் வாழ்வில் ஏற்பட்ட சோகங்களையும் அல்லாதவை செய்தவர்களைப்பற்றிய விமர்சன நல்லவர்களை நினைவுகூர்ந்து நன்றி சொல்ல வே என் கடமையும், முதல் புத்தகத்திலேயே முடிந்துவி எனவே இங்கு இதைப்பற்றி நான் செல்லவிரும்பவி

இந்த திருநாராணயண அந்தாதி II இரண் மொத்தம் 1009 பாடல்களை எழுதி வருடங்களுக்குப்பிறகே அதாவது 01-03- விடிகாலைப்பொழுதில் கைப்பிரதியாக எ முடிந்தது. அதற்குபிறகு நவக்கிரகப் பா களை தெய்வங்களின் தனிப்பாடல்களையும் 199 க்கில் எழுதி திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் உதவிக்கு நான் காத்திருந்தபோது 1009 பாடல்களில் 900 முதல் 1009 பாடல்களை புத்தகத்திற்கு அ கிடைத்து முதல் நிதிஉதவியு தி தேவஸ்தானத்தில் இருந்து எனக்கு கிடைத்தது. இ 1998ம் ஆண்டின் பதிப்பாக திருநாராயண அந்தாதி திருநாராயணன் அருளாலும், ஆ வாதத் வெளிவந்தது. இந்த நூல்களில் க 0 பிரதி பணமென்றுக் கருதாமல் இ தமிழு எனக்குத்தெரிந்தவர்களுக்கு தந்து என்னை நான் உலகத்திற்கு அறிமுகப்படுத்திக்கொண்டேன். அப்போ இவன் எழுதுவான் என்று என் அருகாமையில் இரு என்னை தெரியஆரம்பித்தார்கள். அதற்குப் பிறகு தே பாவணர் நூல் நிலையத்தின் மூலம் இரா அறக்கட்டளை வழியாக இந்த திருநாராயண நூல் 400 பிரதிகளுக்கான ஆணை பிரசுர வி ரூ. 5.30 தள்ளுபடி செய்து ரு 14.70க்கு ஏற்பு வி 18-12-1998 அன்று ஒரு நல்ல அமாவாசை தி புத்தகம் விற்க ஏதுவாயிற்று. அப்போது நான் மகிழ்ச்சியை அந்த நாராயணன் ஒருவனே அறிவ

வறுமையில் வாடியபடியே ஒரு புலவன் இந்த தமிழுலகில் தன்னை நிலை நாட்டிக்கொள்ள ஒரு கால் நூற்றாண்டு ஆகி இருக்கிறது. இந்த எழுத்தின் இரணம், பிரசவவேதனை, இதனால் உண்டாகும் காயம் அத்தனையும் பட்டறிவினால் உணர்ந்தவர்களே தெள்ளத்தெளிவாக உணரமுடியும். அதனால் தான் இந்த திருநாராயண அந்தாதி நூலுக்கு 01-10-1987ல் நான் எழுதியிருந்த "என்னைப்பற்றி நான்" என்கிற முன்னுரையை , வாசகர்கள் என் போராட்டங்களை அறிய வேண்டி அப்படியே கீழே தருகிறேன்.

நான் ஒரு தெருப்பாடகன் வறுமை வளர்த்தப் புதுப்பாடகன். பசிப்பல்லக்கில் பயணம் போனாலும், லட்சியத்தை உண்டு வாழ்பவன்.தமிழை மூச்சாக நினைப்பவன். ஜாதி, மதங்களுக்கு அப்பாற்பட்டு, தர்ம நியாயங்களை மதிப்பவன் அநியாயங்களை மிதித்து அதிகப்பிரசங்கித்தனம் பட்டம் வாங்கியவன். புதுமைகளைப் படைக்கும் முப்பத்தோறு வயதின் இரத்தத்தில், நடைமுறை இது வரை ஒழுக்கக்கோட்டை கற்பனை வாழ்வில் செங்கோலேந்தும் இவன் நிஜ வாழ்வில் ஓர்பணம் தேடி . என் பரம்பரையைக் காட்டிலும் , எந்த வகையிலாவது சாதனை படைத்து வரவேண்டும் முன்னோடியாய், என்பது சுத்த இரத்தம்.எதற்கும் பிடிவாத சாம்ராஜ்ஜியம் என் அந்தக இரத்தம் ....இதுவே அதிகம். இதற்கு மேலும சுயவிலாசப் பட்டவர்த்தனம் வேண்டுமா என்ன ? "

" காலத்தின் வினாடி ஏதாவது என் பக்கம் சாய்ந்து. கருணையை யாரிடமாவது பிறப்பிக்கச்செய்து. இந்தப பாட்டுக்களெல்லாம் நூலாக வந்து இந்த உலகில் என் கவிதைகள் மூலம் ஏதேனும் வருவாய் ஏற்படுமானால், அந்த வருவாயின் பத்து சதவீதத்தை வறுமை ஒழிக்கப் பயன்படுத்திக்கொள்வேன். என்பதை திண்ணமாகச்சொல்லி, என் முதனாசையை இங்கே வெளிப்படுத்திக்கொள்கிறேன். இதைப் படித்துவிட்டு, நிறையிருப்பின், அதை மனதில்

வைத்து அதனை நாராயணார்ப்பணம் செய்துவிடுங்கள். குறையிருப் பின் அது என் பொருட்டே நிகழ்ந்திருக்கும். ஆகவே குறையை களையும் பொருட்டு எனக்குத்தெரியப்படுத்துங்கள். காரணம் நான் தோல்விகளில் இருந்து எழுந்தவன். கண்ணீரில் இருந்து தொடங்கியவன். அடிவயிற்றுப்பசி நாபியை பிடித்து ஆட்டிய அந்தவேதனையின் சிந்தனையில் கவிஞன் ஆனவன் என் வெற்றிகளுக்கு எல்லாப் புறமும் இறைவன் கடைகால் அமைத்திருக்கின்றான். கருவிலிருந்து அப்படியே நான் கவிஞனாகிவிடவில்லை. என்னைக் கவிதைப்பட்டறையில் காலமே திணித்தது. கடவுள் எனும் கொல்லனால் வறுமை, நோய் சம்மட்டிகளால் அடிக்கப்பட்ட என் வெற்றிப்படிக்கட்டுகளை நான் ஒரு "திமிரத்தனத்தோடு" கடக்கிறேன். என்றால் அதற்கு காரணம் என் நாராயணனே! ஆகவே தான் நான் எனக்குள் திறனாய்வில் என்னை வெட்டிக் கூறுபோட்டு, அணு,அணுவாய் அறுவைசெய்து ஒருவித தீர்மாணத்திற்கு வந்தேன். என் பரிமாணங்கள் கீழ்கண்டவாறே எப்போதும் இருக்கின்றன. அவை

நான் எண்ணங்களால் விபசாரப்படுத்தப்பட்டவன் ,
கனவுகளால் சக்கரவர்த்தியாக்கப்பட்டவன்,
நினைவுகளால் ஓட்டாண்டியாக்கப்பட்டவன்,
செயல்களால் பத்தினியாக்கப்பட்டவன்,
தெய்வத்தால் கைதூக்கி விடப்பட்டவன்,
ஆனால் ---
மனிதர்களால் சாதாரணமாக்கப்பட்டவன் !

இந்த எண்ண எல்லைகளே என்னை மக்களுள் மக்களாக எப்போதும் என்னை ஈடுபடுத்தியது. இந்த திருநாராயண அந்தாதி I & II நூல்கள் மற்றும் நூலாக வரப்போகும் திருநாராயணன் அலங்காரம் 1009 ஆகியன தவிர மற்ற எல்லா கவிதைகளின் அடிப்பக்கம் முழுவதும் கண்டிப்பாக தன்னம்பிக்கை பீடமாகவே இருக்கும். உலகத்தைப் பற்றிக்

கவலைப்படும் எவரையும் உலகம் தனக்குள் பொதிந்து வைத்துக் கவலைப்பட்டதில்லை. காலச்சக்கரத்தின் சுழற்சி ஒருவன் கைச்சக்கரமாய் சதா ஓய்வில்லாமல் சுழன்று கொண்டிருக்கிறது. அவன் பாதமலர் தூசிகளிலிருந்து முனிவர்களும், சித்தர்களும் , யோகிகளும், கலைசார்புள்ளவர்களும், கவிஞர்களும் இன்னம் பல செய்வனச்செய்யும் திறமைகளால் பல்துறை சாதனையாளர்களும் உலகின் பொருட்டே அவனால் உண்டாக்கப்படுகின்றார்கள். பின்னர் காரணகாரியம் முடிந்ததும் மரணம் என்கிற தூதுவன் மூலம திருப்பியழைத்துக்கொள்ளப்படுகிறார்கள். என் காலமும் , காரணமும், காரியமும் தொடங்க நாராயணன் என்னை ஏற்றி வைக்கும் இந்த இரண்டாவது படியில் இருந்து என்சாதனையை நிமிர்ந்து பார்க்கிறேன். கொஞ்சம் தூரமானாலும் அதனை அடைய என் கால்களுக்கு சத்தியவலு உண்டு. காரணம் - நான் எப்போதும்," தெய்வத்தால் கை தூக்கிவிடப்பட்டவன் "

சகலம் ஸ்ரீ நாராயணார்ப்பணம்.

*தெருப்பாடகன்.*

முகவரி : தெருப்பாடகன் ,
நிறுவனர், பொதுச்செயலாளர்,
முத்தமிழ்ப் பண்பாட்டுக்கழகம்.
தலைவர், பத்திரநகல் எழுத்தாளர் சங்கம்,
77, இராமலிங்கனார் முதன்மை வீதி,
திருவண்ணாமலை,

இருதயம் தொட்டவர்கள் :-

என் தாய் தந்தை என் உடன்பிறந்த சகோதரி தவமணி தவமணியின் கணவர் திரு. பாலகிருஷ்ணன், என் அன்பு அக்காள் மகன் பா மார்கபந்து என் சித்தி மகன்கள் R.A. நடராசன், S தட்சிணா மூர்த்தி ( பெல் ) என் எடன்பிறவா சகோதரர், பண்புடைய சகலன் முன்னால் வடபுழுதியூர் தலைவர் கு. இராமச்சந்திரன் என் பிரியத்திற்குரிய மைத்துனர் கி. பாபு ஆகியோர்களை, கண்டிப்பாக ஈரமனதுடன் நினைக்கும் நேரம் இது. நன்றி சொல்ல வேண்டிய அன்பு நண்பர்கள் அருணை நா. பாண்டுரங்கன். முத்தமிழ்ப் பண்பாட்டுக்கழகம். உதவித்தலைவர், இந்த புத்தகத்தை அச்சிட தன்னலம் பாராமல் பெருந்தன்மையுடன் ஒத்துழைப்பு நல்கிய புலவர் திரு, சிவசெயஒலிபவன். M.A. B.Ed., அவர்களுக்கும் என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். இந்த புத்தகத்தினை அழகாக, அச்சிட்டு, சிரமம் கருதாமல், பணி செய்து முடித்து தந்த, அண்ணன் திரு .கி. துரை அவர்களுக்கும், முனைந்து செயலாற்றும் து.வாசு, து.ரமேஷ், து. சுரேஷ், து. செந்தில் முதலான அருமை சகோதரர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

பத்திரஎழுத்தாளர் சங்கம். எங்கள் பத்தரை மாற்றுத் தங்கங்கள் 1) R. நெடுஞ்செழியன், செயலாளர், 2 கோ. சண்முகதுரை பொருளாளர், செயற்குழு உறுப்பினர்கள் K. மகாதேவன். M. செந்தில் முருகன், K. மனோகரன் P.மணி, C. செல்வராஜ் மற்றுமுள்ள ஏனைய ஊறுப்பினர்களுக்கும் என்றும் நன்றி ஓவிய ஆசிரியர், கவிஞர் லோகநாதன், பதிவுத்துறைக்கவிஞர் பாரதிமனாளன் ஆகியவர்களுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். என்னுடைய எம்.ஜி.ஆர் கழக இளவல்கள் R.K. மெய்யப்பன் B.A.B.L. வழக்குரைஞர், மாவட்ட செயலர் K. குமார் திமலை நகர செயலர் G.C. வேலு

ஒன்றிய செயலர் பிச்சான்டி ஒன்றிய செயலர், மற்றம் மு. ஜெயபால், R. சண்முகம் , திருவேங்கடம் இரவி பார்த்திபன் மற்றும் உள்ள ஏனைய நெஞ்சங்களுக்கும் நன்றி.தோழர்கள் வீரபத்திரன் மாவட்டச்செயலாளர். சி.பி.எம் K. வெங்கடேசன். செங்கதிர் , தமிழ் மணி , உரு. தனசேகரன் , பவா. செல்லத்துரை S. பலராமன் ஆகியவர்களுக்கும், திருவருணை தமிழ்ச்சங்கம் நிறுவனர் செயலாளர் அருள்வேந்தன் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

நண்பர் தமிழாசிரியர் K. சபரி எம்.ஏ., எக்ஸ்னோரா பா. இந்திரராஜன் , கூட்டுறவு வங்கி N. சண்முகம் ஆகியோர்களையும் நினைக்கும் நேரமிது.

என்னுடைய எம்.ஜி.ஆர் கழகத்தின் தானைத்தலைவர் தன்னிகரில்லா பேரறிஞர், அருளாளர் ஐயா இராம வீரப்பன் அவர்களுக்கும், மாநிலபொதுச்செயலாளர் டாக்டர் எஸ் ஜெகத்ரட்சகன் எம். ஏ. பில் எக்ஸ் எம்.பி அவர்களுக்கும், என் நன்றி உரித்தாகுக. என் பாசமிகு அண்ணன் இலக்கியத்தென்றல் ப. கண்ணன், T.V.S ராஜாராம் ஓட்டல் ஆகாஷ் உரிமையாளர் திரு ஆர். முத்துக்கிருஷ்ணன் , ராமகிருஷ்ணா ஓட்டல் அதிபர் எம். ராமகிருஷ்ணன் அவர்களையும் நினைவு கூர்கின்றேன். என்மீது எப்போதும் அன்பு மாறா என் அண்ணல் என் ஒரே கதாநாயகன் என் நாராயணன் காலடிக்கே இந்நூலை அர்ப்பணம் செய்கிறேன் .

என் பரம்பரையின் முன்னோடிகளான என் பாட்டனார்கள் அம்மையப்ப பிள்ளை, இராமசாமிப்பிள்ளை , ஆகியோர்களுக்கும் என் தந்தையோடு பிறந்த என் பெரியப்பா ஆதிமூலம் பிள்ளை அவர்களுக்கும் மற்றும் என் மூத்த சகோதரர் சேதுராமன் , அவர் வாரிசுகளுக்கும் நான் என்றும் நன்றி சொல்ல கடமைப்பட்டவன் என் சோதரரின் மகன் கோபி அவர்களின் புதல்வன் என் அன்புக்கும் பாசத்திற்கும் உரிய நான் பின்னாளில் என்வாரிசாக கருதக்கூடிய முக்கியமானநபர் என் பெயரன் G.தனுசு. ஆவார்.

இவன்
தெருப்பாடகன்,

உ

ஸ்ரீ. நாராயணன் துணை.

# திருநாராயண அந்தாதி - II

--- தெருப்பாடகன்

## விநாயகர் துதி

போகும் மானுடத்தில் ஆகும் உறவாகி - மானுட
அனந்த கோடியுயிர்களும் அடித்தொப்பையில் உறைவாகி,
விதிஎழுதும் விநாயகனின் அருளே அந்தாதியாகி,
என் நாரணன் பற்றித்தொடர, விநாயகன் அருளட்டும்! 1

## முருகன் துதி

அருளட்டும்! அழகாய்ப்பெருகட்டும்! முருகுமனம்
என்னோடு கூடட்டும்! முகுந்தனினம் இவனென்று
புவியென்றும் புகழட்டும்! புரட்டும் சரித்திரத்தில்
புனிதன் கழல்கள் வேலோடுப் பின்னிப்பிணையட்டும்! 2

## ஈசன் துதி

பிணையட்டும், பிணையில்லாக் கருணையுடன்
ஈசனருள் உறையட்டும், உறைந்தே தமிழில்
வளரட்டும் என் வாழ்வில் ஈசனே
எம்பெருமான் நாராயணனாய் என்றும் மிளிரட்டும்! 3

## பார்வதி துதி

மிளிரட்டும் மிகையில்லா அழகுடனே இளமேனி,
குளிரட்டும் அவள் நினைப்பே குற்றமில்லா மனத்தின் கண்,
வைத்ததேவிப்பாதம் அந்தாதி வாசல் திறந்தே,
தைத்த அன்பு பார்வதியின் கழலில் பனிங்கெனவேப்
பரவட்டும்! 4

## லஷ்மி துதி

பரவட்டும் பல்பொருள் செல்வம் கல்வியுடன்-தேவியருள்
அருளட்டும் இதைப்படிக்கும் மானுடரை உய்விக்க,
அந்தாதி மூலத்தின் அருள் நாயகியே உன்னடியே சரணம்-என்
பந்தமாகி வந்தவளே என்றுமென் நாராயணனே! 5

## ஆஞ்சநேயர் துதி

நாராயணனே உன்னுள் கலந்த உத்தமன் - அவன்
பாராயணப் பாட்டெழுத உன் வலிவே வேண்டுமய்யா!
ஆஞ்சநேயன் ஆக்ஞையினால் ஆகாத செயலுண்டோ-என்
அந்தாதி நாயகன் கழல்கண்ட முதல்வன் நீதானே! 6

## விதியின் துதி

தானேவரும்! செயும் காலம் தனதாக்கி ஆட்டும்,
வீணேவிதியென்றிருந்தாலும், தானே விடாமல் துரத்தும்,
நாரணன் பாத தயவிருந்தால் தயங்கியே நிற்கும் - பின்
தவித்தழும் பக்தரை தயங்காது விலகும் விதியே! 7

## தமிழ்த்துதி

விதியேயென்றிருந்த என்னுள் விதையானாய,
மதிவழியே தமிழ் நுழைந்து ஒரு கவிதையானாய்-நெஞ்சில்
ஒரு திருவரவே துணையாகி தமிழமுதமானாய் - என்றும்
அருள் வரவே அந்தாதிப்பாடவைத்து அழகுதந்தாய்! 8

## உலகத்துதி

தந்தாய் தந்தையாய் இருந்து நீயே பல்லனுபவம்,
தமிழர்நெறி உலகினிலே பரவி விட்டால் அமைதியுறும்
மானிடமே, என்றுசொன்னால் மிகையில்லை என் உலகே - நீ
மாறிடவே, உலகினிலே வன்முறையே ஓடிப்போகும்! 9

# திருநாராயண அந்தாதி -II- பாகம் ஆரம்பம்

போகும் பூவுடம்பு மண் விழ்ந்து புழுவாகும்!
சாகும் மானுடரின் சதையாசை உயிராகும்!
காணும்கனவிலும் கண்ணன் வரும் திருநாளே,
க்ர்மங்கள் தொலைத்துலகம் விழிக்கும் நாளாம்! 10

நாளாம் ! நன்னிலத்து பக்தர் கூர்வாளாம் !
வேலாம் ! விதிசட்டை மாற்றும் நல்ல அணியாளாம்!
பாலாம் பக்திமனம் கொண்டவரை சேர்த்தனைக்கும்
தோளாம்! அந்த
நூலாம் இடைதாங்கும் இடையனே எங்கள் தலைமேலாம்! 11

எங்கள் தலைமேல் இடையனவன் காலே,
பொங்குதமிழ் பூம்புனலால் வந்த நாளே,
புனித யெண்ணம் பூமகனை யெண்ணும் தினம்,
அணிமணிகள் கொண்ட அம்மையைத்தான்
கும்பிடுமே மனம்! 12

மனம்,வாக்கு,காயம் பணிந்து,
நரம்பிலுறையும் குறுதியுறுக்கி,
ஆன்மஜோதி அர்ப்பணித்து அன்பைத்தான்
அடைமழையாய்ப் பெய்துவிட்டால் அண்ணல்
வருவான்! 13

வருவான் வண்ணமழைமேகன் என் கண்ணன்,
தருவான் தரணி புகழ் செல்வமத்தனையும்,
பெறுவான் நம்மிருகண்ணின் அன்பு நீரினையே
குருவான குணாளன் கோவிந்தன் என் தோழன்! 14

தோழனாகி துயரம் வாங்கும் தாயாகி,
விரக்தியெனும் வெறிபோக்கும் மனைவியாகி,
மதிகுழம்பி, மயக்குகையில் நல்ல சிந்தனையாகி,
விதிமாற்றும் தெய்வமாகி வினயமாய் சிரித்திடுவான்! 15

சிரித்திடுவான், சிங்காரத்திருத்தேர் ஏறிடுவான்!
குதித்திடுவான் குணாளனைக் கண்டுவிட்டால்,
குறையில்லை கோவிந்தனை நினைப்பவர்க்கு,.
சிறையில்லை உலகம், என்றும் சித்தனவன்
சிந்தனையில்! 16

சிந்தனையில் சிரிப்பதெல்லாம் பரமாத்மா,
சிந்தைதனை சிரமுள்ளே ஏற்றி நின்றால்- உலக
நிந்தனைகள் என்செய்யும் என்னிடமே - என்றும்
வந்தெனை யாட்கொள்வான் வடிவேலன் மாமனே! 17

வடிவேலன் மாமனே! வணங்காமுடி நாதனே!
கணங்களின் தலைவனே! கற்பூர ஜோதியானவனே!
பிணம் தின்னும் பெருமானின் மைத்துனனே!- என்னுயிர்
தினம் வணங்கும் நாராயணனே!. 18

நாராயணனே! நற்றமிழ்வாணனே!
என்னுள்ளம் உனைத்தேடி நிதம் அலையும்!
கண்ணுறங்கிப் போனாலும் கனவில் தேடும்!
என்னன்பு நதிப்பாய்வதெல்லாம் உன் கடல்
வெளியில்! 19

வெளியில், உள்ளில் ஒரு போதும் மறையா தென்றல்,
கலையில், நிலையில் கருப்பேறாப் பூங்குயில்!
வலையில் விழுந்தேன்! வாய்சொல்லிழந்தேன் - என்
பாலை வாழ்க்கையில் பசும்புல் முளைக்கக் கண்டேன்! 20

கண்டேன் கருப்புச்சூரியனை, இன்று
உண்டேன் உத்தமனின் உறவையே உணவாக,
உருண்டேன் திருமலையில் துயர் போக,
மருண்டேன் மானிடப் பொய்வாழ்க்கையாலே! 21

வாழ்க்கையாலே வந்த துன்பம் வளருதற்கே,
கேட்காமல் ஆசைவந்து விரிந்து பரவும் !
செத்துச்செத்துப் பிழைக்கும் இந்த மானுடமும்,
சொத்தாக நினைப்பவர்க்கு சொந்தமில்லை, நாயகனும்!22

நாயகனும் நம்மில்லம் கால்பதித்திடுவான் !
சேயாகித் தாயவனைப் பாசத்தில் திளைக்கவிட்டால்,
நாயாகித்திரியும் வாழ்க்கை சுவையாக்கி,
நலிவுற்ற மனம் தாங்க நாராயணன் வந்திடுவான்! 23

வந்திடுவான் துரிதமாய்ப் பாண்டுரங்கன்,
எண்ணங்கள் விதைத்துப்பக்திநீர்ப் பாய்ச்சி விட்டால்,
காலத்தில் அறுவடையாய் கண்ணன் வருவான்!- என்றும்
ஞாலத்தில் புண்ணியத்தை நமக்குத் தருவான் ! 24

தருவான் நல்லபுத்தி ஞானமெனும் செல்வத்தை,
தருவதைப்பெற்று நல்லவழியில் நாம்,
திருப்பிவிட்டால் தெரிந்துவிடும் வைகுந்தம்!
திருந்திவிடு மனத்தினால் கிடைத்துவிடும் முக்தியுமே!25

முக்தியுமே முறையான பக்தியினால் வந்துவிடும்,
முகுந்தனவன் விளையாட்டில் துன்பமெலாம் சோதனையே,
நல்லகல்லே உளிபட்டு சிலையாகும்! - உலகில்
சொக்கத்தங்கம் நெருப்பிலிட நகையாகும்! 26

நகையாகும், மனிதருக்கே பரந்தாமன் உபதேசம்,
நகைப்பில்லா மானிடர்க்கு எந்த சுகம் கிட்டிவிடும் ?
வஞ்சனையில் தோய்த்த சிரிப்பெல்லாம் பகையாக
முட்டிவிடும்!
சிந்தனையில் பூத்தநகை சிங்காரன் திருப்பாதம்
காட்டிவிடும்! 27

காட்டிவிடும் கண்ணப்ப ஜோதியே வெளிச்சத்தை,
போட்டிருக்கும் மனைவி, மக்கள், பந்தமெனும் சட்டையினை,
கழட்டும் நாள்! கண்ணனவன் தெரியும் நாள்!- பக்தியோடு,
பழகட்டும் ஊளைச்சதை பரந்தாம மருந்து தின்ன! 28

திண்ணமுடன் திருவேங்கடவனைக் காதல் கொண்டேன்,
என்விழியில் மூடி, அவன் இதயம் இறங்கிடவே,
நானெடுத்த ஜென்மத்தின் பயன் அடைவேன்!
நல்ல புண்ணியத்தைச் செய்வதற்கு வழிவகுப்பேன்! 29

வகுப்பேன் என்னாசை ஓசைகளை,
மனம் வந்த அன்னாசை தினம் பெருக்கி ,
இறைவனவன் எண்ணத்தைக் கூட்டி. கூட்டி,
ஈன்றவளால் வந்த துன்பம் கழித்தலாகி கடை விழட்டுமே! 30

விழட்டுமே வீண்பகட்டு வாழ்க்கையுமே !
தாழட்டுமே தறிகெட்ட உலகபந்தமுமே,
சாகட்டுமே பெண்ணாசை, மண்ணாசை, பேராசை எல்லாமே,
சாந்தமாகட்டுமே இருதயமே, தலைவனவன் நினைவாலே! 31

நினைவாலே நெஞ்சுப் பெருக்கட்டும்,
நிதம்,நிதம் கண்ணிர்ப் பூமலரட்டும்,
கமலக்கண் பார்ப்பதற்கு கண்கள் ஏங்கட்டும்,
விமலநாதன் விடிவிளக்கை என்னுடலம் ஏற்றட்டும்! 32

ஏற்றட்டும் கவிஞரெல்லாம் இறைவனவன் பாட்டினையே,
தூற்றட்டும் பொய்ப்புரட்டு, வதந்தியெனும் வாந்திகளை,
மோதட்டும் உள்ளத்தின் அலைகள் பரந்தாம எண்ணத்தில்
ஒலிக்கட்டும் இசையெலாம் இறைவனவன் காலடியில்! 33

காலடியில் வண்ணப்பூ நானாவேன்!
இடைநூல் பிடித்த கையோனும் என்னாசைச்சீழ்
அகற்றிடுவான்,
மால்நிலவு மயக்கத்தில் மற்றவை மறந்திடும் !
பால்வண்ண சிரிப்பழகன் பாண்டுரங்கன் கோபாலன்! 34

கோபாலன் , கோமளச் சிரிப்பழகன்,
கொட்டும் முரசத்தின் நிறம் ஒத்த ஆணழகன்,
எட்டுத்திக்குப் புகழ்படிக்கும் இரக்கத்தின் உருவானவன்,
பாட்டுக்குக் கருவாகும் பவள உதட்டழகன்! 35

உதட்டழகன் புன்சிரிப்பில் உலகம் விரிந்துவிடும்!
அவன்படைத்த அகிலமே அன்பில் மூழ்கிவிடும்,
கொடுப்பதும், எடுப்பதும் கொள்கையான அன்பானால்,
தடுப்பதும் யாரோ, தரணிவாசனைத்தான் காண்பதற்கே? 36

காண்பதற்கே கண்கோடி வேணடும் ! - நாரணன்
கண்ணழகைச் சொல்வதற்கே காலமெல்லாம்
பாடவேண்டும்!
விண்ணாளும் வேந்தனை நம்மொழியில் அடக்கவே,
மண்ணிருக்கும் மட்டும் நம்முயிர் இருக்க வேண்டும்! 37

வேண்டும், வேதனையைத் தாங்கும் மனம் வேண்டும்,
மீண்டும், மீண்டும் பெருமாளை நினையவேண்டும்,
தாண்டும் மனம்நிறுத்தி தமிழாலே ஆளவேண்டும்,
தூண்டும் மனமாகி தூயவனைப் பாடவேண்டும்! 38

பாடவேண்டும் பைங்கிளியின் மணவாளன் புகழ்
தன்னையே,
ஆடவேண்டும் அனந்தசயனம் அடிபற்றவே,-நான்
விதித்த வினை அறுப்பதற்கு மராமரம் துளைத்தவனின்
கறுத்தநிறம் கவியாகி காதல் வெள்ளம் பெருக
வேண்டும்! 39

பெருகவேண்டும் பெரியநாயகியை மணந்தவனின் அன்புநதி,
நெஞ்சில் கருகவேண்டும் கனலான கோபமெல்லாம்,
விண்ணுலகம் செல்லுகையில் எதையெடுத்து செல்லுவோம்,
கண்ணிரண்டைத் தந்தவனின் கதி நினைத்துப் பாடுவோம்! 40

ஓம் எனும் மந்திரத்தின் சூட்சுமத்தை,
தாமென சொல்லாமல் தனித்து நிற்கும்,
திருவேங்கடத்தின் நாயகனே ஒளிக்கடவுள்,
தெய்வமெல்லாம் வணங்கிவிடும் தனிக்கடவுள்! 41

உள்ளொன்று வைத்துப் பேசும் மானுடர்
உள்ளமெலாம் உள்ளது கள்ளமே!- அவர்
இமை மூடி இமைதிறக்கும் கணம் தவிர்த்து
இயம்பி பல சொல்வதெலாம் பொய்மொழியே! 42

பொய்மொழியே மூச்சாகப் பேசுமிவர் உலகில்,
வாய்மை வந்து வாழ்வதும் தான் எந்நாளோ?
தூய்மையனாய் துயிலுகின்ற கோவிந்தன்,
துடித்தெழுந்து எமைக்காப்பதும் தான் எந்நாளோ? 43

எந்நாளோ நான்செயத முன்வினைகள்,
இந்நாளில் நெருபபிலிட்ட புண்குத்தும் வேலாகும்,
மண்ணாண்ட மன்னரே யானாலும் எம்மன்னவன்,
கண்விதித்தக்கட்டளைதான் காலத்தை மறக்குமோ? 44

மறக்குமோ மாயவனை என்னிதயம்,
என்னை நான் மறப்பதும் ஏதுவானால்,
கண்ணனை மறப்பதும் நியாயமாகும்!- என்
கனவிலும் நனவிலும் கட்டுண்டு கிடப்பதவன் காலடியே! 45

காலடியே புவியின்பம், க ண்ணிரண்டே
முக்திவழி, சங்கும், சக்கரமும் நமைக்காக்கும்,
ஜனார்த்தனன் புன்சிரிப்பே பிறவிபோக்கும்,
தனத்தோடு, கல்வியும் தானாக வந்தடையும்! 46

வநதடையும் நனமையெல்லாம் அவனருளால்,
சொந்தங்கள் மாறிவிடும் அவனொளியால்- கால
மந்தங்கள் செயல்போக்கும் நமதறிவால்- ஞான
பந்தங்கள் நமைத்தேடும் நாயகனால்! 47

நாயகனால் நான் வந்தேன் என்றாலும்,
என் கர்மங்கள் இப்போது அறுக்கின்றேன்,
கண்ணீரில் இருகன்னம் நனைந்தாலும்,
கண்ணனைத்தான் நினைக்கின்றேன் எந்நாளும்! 48

எந்நாளும் சோராத இதயத்தில்,
மின்னாளும் இடைஒத்த அம்மாவின்,
கண்ணாட்சி மார்புதைத்த மாயவனை,
மறக்காத உளம் வாங்க என் செய்வேன்? 49

செய்வேன் எழுத்துத்தொழில் அவனாலே,
நெய்வேன் செல்வத்தைப் புவியினிலே,
என்மக்கள் கீழான செயல் அறவே,
அச்செல்வம் தந்து பலதர்மம் காண்பேன்! 50

காண்பேன் வயிற்றுப்பசி பொசுங்கிப்போகவே,
காண்கிலேன் வையத்தில் ஓர் தார்மீக வாழ்வினை,
நாணினேன் நன்மக்கள் தீவழி புகுந்து உயரவே,
வாடினேன் வாழுலகின் பொய்கண்டே! 51

கண்டேன் காலனைச் சுடும் கழற்காலினை
உண்டேன் தமிழாலே நாரணன் நல்லருளை,
வணங்கேன் இனியொரு மானிடர்க்கே, - இனிப்
பிணங்கேன் பெருமாளின் பேரன்புடனே! 52

பேரன்புடனே பெருமாளை வணங்கி நின்றால்,
வையகத்தில் கிடைக்காத வாழ்வுண்டா?
வாழ்வியலைத்துறந்து ஓடத்தான் வழியுண்டா?
கைமாறு கருதாமல் செய்பவன்தான் கண்ணபிரான்! 53

கண்ணபிரான் காட்டிடுவான் புன்னகையே,
புன்னகையில் பூத்துவிடும் அன்பு மனம்,
அன்பு மனம் ஆற்றிவிடும் துன்பமெல்லாம்,
துன்பமெல்லாம் துவண்டுவிடும் அவனழகில்! 54

அவனழகில் புண்ணியமே பூத்துநிற்கும்!
ஆசைமனம் அலைந்தலைந்து தேவகாட்சி தேடும்!
பிறவிப்பயன் எடுத்ததிற்கு பெருமானை வணங்கிவிட்டால்,
மீண்டுமொரு பிறவியில்லை மேதினியில்! 55

மேதினியில் உலகபந்தம் பெருந்துயரம்,
மேவுகின்ற எண்ணமெல்லாம் சுயநலம்!
மானுடனின் பிழைப்பெல்லாம் ஈனச்செயல் - இதை
மாற்றவரும் மன்னவனே கோவிந்தன்! 56

கோவிந்தன் நெற்றிநாமம் குறை தீர்க்கும்,
குறைதீர்க்கும் செயல்களிலே நிறைவாழும்!
நிறைவாழும் நெஞ்சமெல்லாம் நிமலன் வீடு!
வீடுதரும் பெருமாளே என் உயிரின் நாடி! 57

நாடியிலே, நரம்பினிலே நாமதேவன் துடிப்பிருக்கு,
துடிப்பிருக்கும் துயரநெஞ்சில் இரக்கமுண்டு,
இரக்கமுள்ள மாந்தரெல்லாம் இறைவன் புக,
இருதயத்தைத் திறந்துவைக்கும் வழக்கமுண்டு! 58

உண்டான பந்தம் உலகில் நீதானே - என்
உயர்வுக்கு வழிகாணும் உத்தமனே! - மனத்தில்
அயர்வில்லை அமலனே, அடிதொழுதேன் ! - உன்
பயிரான என் மனம் உனக்காகவே! 59

உனக்காகவே உள்ளமீந்து உயிர்தறித்தேன்!
என்னையாள் தந்தை நீ பெற்றாயோ, இல்லையோ,
பெருமாளே, என்னாளும் உன்னடிமை நான்தானே,
என் கண்ணா நீயின்றி நான் எங்கே? 60

எங்கேயென்று என் ஐயனைத் தேடுவேன்,
எல்லாமும் நிறைந்தவன் எங்கேயும் இருப்பானே!
என்னறிவு திறனாய்வு கண்டு அவனோடே கூடுமோ?
கண்ணான கண்ணா, நீ கருணை வைத்து வாராயோ?61

வாராயோ? வண்ண இதழ்விரித்தே எனைநீயும்,
உன்னுள் புகவைத்து உளம்தான் தருவாயோ?
சந்தேக வாதத்தை தீர்க்க ஒரு மாமருந்தாய்,
உன் தேகம் கண்டாலே உயிர்வாழ்வேன்! 62

வாழ்வேன் என் நாராயணனை திருப்பாதம் நினைந்தே,
இல்லையொரு தொய்வு மனத்தினிலே,
மனம் வைத்து வந்தவனை தினம் வணங்க,
மாயவனே வழிசெய்வான் மனத்தினிலே! 63

மனத்தினிலே தினம் வந்து ஆடுமந்த இடையனே - என்
குணத்தினிலே கொலுவிருக்கும் நாயகனாம்,
பணம் பண்ணும் பாருலகில் வாழ்கின்றேன்,
பரந்தாம மந்திரமோ எனையாளும்! 64

ஆளும் அன்பழகன் அடிவணங்கி,
மூளுகின்ற பகைமுடித்து முக்திபெற,
மேலும் இதயத்தைச் சுத்திசெய்து,
காலம் கடந்தவனைக் கண்டு கொண்டேன்! 65

கண்டு கொண்டேன் கடிமனத்தில் வந்தவனை,
எந்தநாளும் பிரியா ஈசனரி வந்துதவ,
முந்தை நாயகன் முத்துக்குமரன் மாமனே,
எந்தனைக் காத்து இதயத்துள் புகுவானே! 66

புகுவானே புவியேழை என் மனத்தில்,
விதிபடைத்து உலகநெறி நெய்ததிலே,
நானுமொரு நூ^லிழையானாலும், அந்நூல்
பட்டாக்கிப் பளிச்சிடப் பகவானே அருள்செய்வான! 67

அருள்செய்வான் அனந்தசயனன்,
பொருள்நெறி கொண்ட உலகில்,
பொறுமையுடன் அன்பு பண்ணும் தெய்வநெறி,
தெரிந்தவரைச் சேர்த்தணைக்கக் கருடனேறி வருவானே! 68

கருடனேறி வருவானே கார்த்திகேயன் மாமனே!
தெருவிலே நின்றாலும், சேர்த்தணைக்க ஒருவரும்,
ஆதரவை மறுத்தாலும், பொய்ச்சிறையில் போட்டே,
எம்மைப் பூநரகில் தள்ளினாலும், காப்பவன் கண்ணனே!69

கண்ணனே உனைக்காண்பார்க்கு மறுபிறவி ஒன்றில்லை,
நரர்துன்ப
நமைச்சலும்,நாரணபக்தனைத்தொடப்போவதில்லை,
பிறர்துன்பம் நாம்வாங்க, பெருமாளே பூஞ்சிரிப்புடனே,
நம்துன்பம் வாங்க, நாம் பார்ப்போமே நேரிடையாய், 70

நேரிடையாய் முன்னம் செய்தவினை வந்துறுத்தும்,
பாரினிலே பலதுன்பம் காட்டி நிற்கும்,
பிறவிப்பயனெல்லாம் பேராசை வடிகாலே - மாயவனைப்
பிரிந்தறியா உள்ளத்திற்கு ஏதினி மறுபிறவி! 71

மறுபிறவி எடுத்தாலும் மாயவனை மறக்காத,
உருவங்கள் எடுப்பதற்கே உளம் வைத்தால்,
பிறந்திறந்து பிழைப்பதற்குத்துன்பப்படும் நிலையை,
மனதார விரும்புவேன், மாயவனே உனக்காக! 72

உனக்காக பூமிதன்னில் வாழுகின்றேன்,
உயர்வும், தாழ்வும் எனக்கில்லை,
எல்லாமும் நீயே என நினைக்கின்ற நெஞ்சத்தை,
தந்தபின்னும் கவலைகொண்டால் தயாளா என்னபயன்? 73

பயன்கருதாமல் பலசெயல் செய்பவனே
உன்பிள்ளை வருந்திதுன்பப் பல்லக்கை சுமந்தாலே,
அதுகண்டு பெருந்துன்பம் அவனியிலே உனக்கேதான்,
ஐயனே ஆதரிப்பாய், ஆசை மிகக் கொண்டவனை! 74

அவனைப்பாடு மனமே தினமொரு புண்ணியம்,
அவனியிலே கூடிவரும், நம்மாசை ஓடிவிடும்,
நமச்சிவாயன், நாராயணன் அவனேயாவான்,
சிவ,சிவ மந்திரமும்,கோவிந்தமும் வேறில்லையே! 75

வேறில்லையேநான், உனைவிட்டுக்கருத்தாலும் பிரியேன்,
அணுவுக்குள், அணுவின் அணுகாத்திருக்கும் பெருமாளை,
அடியேன் அறியாமல் ஏதுசெய்ய இயலுமிங்கே,
முடிதறித்த முரளீதரன் கால் தாங்கப்பீடமென் தலையே! 76

தலையே தாமோதரனை என்றும் வணங்கும்,
நிலையே தாழ்ந்த போதும் நிம்மதியாய் விளங்கும்,
மலையாய் துணைவரும் மகேந்திரநாதன் - என்சகல
நிலைக்கும் மூலமாம், சண்முகன் மாமனே! 77

மாமனே, மாயனே மனத்தின் காவலனே!
வாமன அவதாரா! வண்ணங்களின் மூலவா!
ஞானரதமே! நாணல் மல்ரே! மோனத்தவமே!
மோகனச் சிற்பமே! காளமழையே!கண்ணப்பமருந்தே! 78

மருந்தே தின்று மானுடதேகம் நோய்போக்கும்,
விருந்தாய் அன்புண்டு ஆன்ம நோய் போக்கும்,
பூவிருந்த அம்மாவின் நாவிசை குழல்தரும் அந்த
நாராயணன் ஒருவனே நம்ஒளி நாயகன்! 79

நாயகன் திருவருளால் நாளும் பெறலாம்!
வேத,பூத, நாதநாயகன் சாதியற்றவன்,
அந்த சாத்மீகன் எங்கள் மாதலைவன்,
எந்தத்திக்கும் கேட்டுவிடுமவன் கோவிந்தம்! 80

கோவிந்தம்பாடிக் கொண்டாட - அந்தக்
கோவிந்தன் வருவான் சொந்தம் கொண்டாடி,
பேரின்பம் பரந்தாம மந்திரமே,
வேறில்லை ஏழுலகில் அன்புமயமே! 81

அன்புமயமே என் என்போடும் குருதியாவும்,
உன்னன்பு ஊற்றென்றால் மிகையல்ல,
சதைகொண்ட மலவுடம்பில் புழுக்கள் விளையும்,
ஆன்ம மனமென்ற உன்னிலோ புண்ணியம் மலரும்! 82

மலரும் பூவுக்குள் மகரந்தம் வைத்தமாட்சி,
அலறும் ஆன்மாவுக்கு காட்டய்யா உன்காட்சி,
புலரும் பொழுதெல்லாம் புண்ணியனைக் காண்பேனே,
களர்நிலம் என்னைக்கழனியாக்கினாய், நீ வாழியவே! 83

வாழியவே உன்னை வாழ்த்த தகுதியெனக்கில்லை,
ஆனாலும் அன்பாலே விளித்துவிட்டேன் தவறய்யா,
என் குற்றம் பொறுப்பதும் உன்னியற்கை,
என்னிடம் சுரக்கும் பக்தியிலே இல்லையொரு செயற்கை! 84

செயற்கைக்கும் இயற்கை பௌதிகமானவனே!
உனையெண்ணி எழுத்தாக்கி, எழுத்தையே மலராக்கி,
பணமில்லா கையாலே, தினம் நானேதொடுத்தேனே,
குணமாக வாங்கி குறுவந்தாதி முடிக்க நீயருளே! 85

அருளே, மங்களம் பாடநீ வருவாய்,
மங்கலமாய் நின்திருப்பதியில் நானுறைய,
பங்கயமாய் பக்தியிலே பூத்தபெருமானே - நீ
மூண்ட தீ முள்முடியை மாற்றவந்த கொன்றைமலர்! 86

கொன்றைமலர் கொண்டவனின் சொந்தக்காரன்,
கொங்குதமிழ்ப் பூமணக்க வந்தநாதன்,
எந்தனுக்கு எல்லாமும் ஏற்ற வழி சொல்வதற்கே,
பந்தமாய் வந்தபலராமன், ஜெயராமன் பூமுகமே
கொன்றைமலர்! 87

கொன்றைமலர்! கோமேதகம்! குவிந்தபொன் ஆபரணம்!
மனம் வெல்லவந்த மாயமருந்து - நெஞ்சின்
கனம் போக்கும் காதற்கிளி மணவாளன்,
எல்லாமும் என்னரசன் கோவிந்தனே! 88

கோவிந்தனே! கோபாலனே! பாண்டுரங்கப்பெருமானே!
பரந்தாம சூத்திரமே! பைங்கிளியின் மணவாளா! - உன்னில்
பரந்தமனம், உன்னிலடங்கி உளம் உயர்ந்து,
சிறந்தகுணம் தென்னலென உன்னால் வந்ததடா! 89

வந்ததடா வல்லதுன்பம், வாழ்க்கையெல்லாம் போரின்பந்தம்,
வெந்ததடா என்மனதும், வெறும் வாழ்க்கை யாவும் சோகம்,
தந்ததடா உன்பாதம் ஞானம் யாவும் - என்
பந்தமெல்லாம் பகவானே, உன் காலடிதானே! 90

தானே வந்தாய்! தமிழ்த்தந்தாய்; தெய்வமணங்கமழ,
வானே வந்ததுபோற் வடிவழகன் நீ வந்தாய்,
தேனேயெனப் பெண்டிற் பாடியநாதனில் அமுதம் ஊற,
நானேயுனக்கு நல்லமாற்றென நாரணா நீ வந்தாய்! 91

வந்தாய்; வடித்த சாறில் கற்கண்டாய்யெனைமென்றாய்
மனம் படித்த பரந்தாம் மந்திரமாய் மணந்தாய்! - தினம்
நொடித்த நாட்களெல்லாம் திசை திருப்பிக்கற்பகமாய்,
சுகம் தந்தேயெனை ஆதரித்தாய் அன்பரசே! 92

அன்பரசே! அன்பின் அடிக்கரும்பே! குன்றே!
குன்றெரியும் நந்தா விளக்கே! குமிழ்கண்
திறந்த அருள் மடையே! கொற்றவனே! - என்
குழலூதும் குபேரபுரி சொக்கத்தங்கமே! 93

தங்கமே! தகதகக்கும் தாம்பாளச்சூரியனே!
சிங்கமே! சிறுபுலியெனத்தாவும் வீரக்கொழுந்தே - என்
வெற்றிமாளிகையின் விண்முட்டும் இன்பக்கலசமே!
என்கண்ணே! கருவிழியின் பார்வையே! கண்ணனே! 94

கண்ணனே ஏனிந்த துன்பம் என் வாழ்க்கையிலே,
விண்ணமுதை அறிந்ததனால் வீண்கண்ணீரென்றால்,
மண்ணாளும் மக்களெல்லாம் மனதில் நகைப்பரன்றோ?
என் கண்ணாளா, நம்பியவர் கைவிடுவதென்ன உன்
தொழிலோ? 95

தொழிலோ, பொய்யில்பொய்யாய்விளையும் பயிர்,
எழிலோ, நெய்யில்நெய்யாய்வேகும் உயிர்,
நிலையோ தறிகெட்டு ஓடியாடும் கரவாமாடு - என்
விலையோ உனைநினைக்கும் அளவின் வீடு! 96

வீடும் காடும் சேர்வதெல்லாம் வினைப்பழமே,
நாடும், மனதும் நாரணன்எண்ணமே! - நெஞ்சில்
பாடும் பாட்டும் பரந்தாம மந்திரமே! - கண்
ஆடும், ஆட்டமும் ஆயர்பாடியானை நினைந்தே! 97

நினைந்தே மனத்துள் வாழ்கின்றேன் - நித்தம்கவி
புனைந்தே புரவலா யுனையெண்ணுகிறேன்! - என்
வினையேபுவியிலிப்படி அழுதழுதுமாய்வதும் -
பொருளுக்காய்
தலையே விற்பதும் தமிழறிந்தபெருமாள் நீ அறியாயோ? 98

நீ அறியாயோ என்பெண்டுபிள்ளைக்குடிகளை,
அவர்தம் பொருட்டே அவனியில் உழல்கின்றேன்,
அஞ்சி,அஞ்சி வாழ்ந்தே நெஞ்சில் கருமை பூத்தேன்,
பிஞ்சிலே பழுத்தேன்! பேதையாய் வாழ்ந்தேன்! 99

வாழ்ந்தேன் காட்டிலுறங்கும் வரிப்புலியாய்,
வீழ்ந்தேன் பொருட்படுகுழியிலே - கண்திறந்தே
பாய்ந்தேன் பாழ்கிணற்றில் பாவிகளைநம்பி- முடிவில்
உணர்ந்தேன் உன்னை, உயிர்விழித்தேன்அதனால்! 100

அதனால், இதனால் என்றுஎன் தவறை,
பணத்தால் மறைத்துப் பிறரைப் பரிகசித்து,
குணத்தால் கீழிறங்கிய யென்னிலே - நீ
நினைத்தால் நினைத்தபடி வந்ததென் புண்ணியமே! 101

புண்ணியமே செய்ததினால் உன்புகழ் நினைத்தேன்,
பண்ணியசெயல்களெல்லாம் பகவானருள் எனக்கருதியதால்,
எண்ணிய யாவும் இன்பவூர் ஏகினேன்! - என்
கண்ணா! கருத்தோவியம் நீயே மணிவண்ணா! 102

மணிவண்ணா! மாயவா! மந்திரபுரிமன்னவா!
கனிகொஞ்சும் கன்னியர்க் காதற்குழலே! - என்
மேனியெங்கும் போட்டப் பணக்கொப்புளங்கள்,
நாணி நான் கண்ணீர்விட, கண்டென்னை தேற்றியவனே!
103

தேற்றியவனே! தென்பொதிகைக்காற்றின் குளிர்மதியே - என்
எண்ணமெல்லாம் நீ அறிவாய் ! - உன்கண்
வண்ணமெல்லாம் நான் அறிவேன்! - நெஞ்சின்
புண்மாறப்போட்ட மாமருந்தே, புத்தொளியே! 104

புத்தொளியே! புதுப்புனலே! கனலழகே! கரும்பே!
வித்தகரின் மனதில் வரும் வித்தையும் நீயே! - என்
மொத்தசுக,துக்கம் யாவும் உன் விழியே!
எத்தனைநான் கண்டாலும், இறுதிவழி உன் வழியே! 105

உன்வழியே பயணித்தேன், உலகம் புரியவில்லை,
என் வழியே சென்றாலும், எதுவும் தெரியவில்லை,
கண்வழி புகுந்தே காதல்கொண்டாய், ஆனாலும்
மண்வழி மறைத்தே மயங்கிச்சிரிக்கின்றாய்! 106

சிரிக்கின்றாய்! சிந்தையிலுறைகின்றாய்!
நம்பியவர் நெஞ்சில் நன்னடனம் புரிகின்றாய்!
இன்பவூர் காட்டுகின்றாய்! எண்ணியவை யாவும்
எனதென்பவர் விதியை ஏமாற்றமாய் விதிக்கின்றாய்! 107

விதிக்கின்றாய் விரைவினிலேஉ_லகபாசம் - மனம்
கொதிக்கின்றாய் உன்குழவி வரம்பு தவறுகையில்,
மதிக்கின்றாய் மண்வீழ்ந்து உனைதுதிப்பவரை - ஓடிவந்து
துதிக்கின்றாய் உன் பக்தர்தம் வீட்டினையே! 108

வீட்டினையே உன்கோவிலாய் தினம் நினைத்து - என்
பாட்டினிலே நினைந்து, நினைந்து தினம் மறந்து -உயிர்க்
கூட்டினிலே துன்பம் வந்துறுத்தியபோது - மனக்
காட்டினிலே மறுபடியும் உனைநினைக்கும் நிந்தைஎன்ன?
109

என்னநினைத்தேன்? ஏது செய்யவந்தேன்?ஏனிந்ததுன்பம்?
விண்ணமுதைக்கண்டு, மண்ணிலே கூத்தாடி மகிழ்ந்து,
பண்ணிய கருமத்தால், பகவானை மறந்து கண்ணீர்சிந்தி,
எண்ணியசெயல் இழப்பதுவும் என் விதியோ? 110

விதியோ நீவிதித்தது! என் மதியோ குழம்பியது!
இருட்காட்டில் ஏங்கி நான் தவிக்கையில்,
துளிப்பொறி ஒளியாய் நீதெறித்தாய்! - என்
களிப்பெல்லாம் கொண்டாடும் காரணமானாய்! 111

காரணமானாய்! என்நெஞ்சில் பூரணமானாய்!
புவனம் யாவும் பொன்கொடுத்தாலும் - இப்புவி நீக்கி,
ஏழுலகம் எல்லாம் சுகம் கொடுத்தாலும்- என
நெஞ்சமாடும் அண்ணல் திருமலைத்தேவனாகுமோ? 112

தேவனாகுமோ எனச்சந்தேகம் கொண்டவர்,
தேகமெல்லாம் இப்புவிப் பேய்களாய் ஆசையிருக்கும்-
பிழைப்பில்
வேகமாய் செல்வதெல்லாம் வேங்கடவன் பிச்சையன்றோ? -என்
தாகமாய் நிற்குமவன் பாதமே என் சொர்க்கம் ! 113

சொர்க்கம்! சொக்கத்தங்கம்! கோமேதகம்! - வளரும்
மார்க்கம்! வைரம்! வைடூரியம்! நெஞ்சில்
நிலைக்கும் நிமலன் பாதங்கள்! - என்றும்
தாங்கும் என் தலையே அவன் பாதங்கள்! 114

பாதங்கள் என் வாழ்வின் வழிகாட்டும் கோபுரங்கள்!
நேரங்கள் என் கைகள் துதிக்கும் காலங்கள் - கரு
மேகங்கள் நெஞ்சிலவனை நினையாதபோது சூழும்! - இதய
இராகங்கள் அவனுள் மூழ்கும்போது வெளிப்பாயும்
கீதங்கள்! 115

கீதங்கள் யாவும் உன் எழில் வண்ணம்,
நான் நினைந்து, நினைந்து மூழ்கி எடுக்கும் முத்தே!
இவ்வுயிராடுவதும், அசைந்தசைந்து யுனை அசை
போடுவதும்,
மெய்யூர் கண்டமேகவண்ணன் கருணையினால்! 116

மேகவண்ணன் கருணையினால் கடைத்தேறி,
நெஞ்சில் பூக்கும் நினைவலைகள் தலையேற்றி,
மந்தகாச சகம் தன்னில் நாரணநூல் நெய்து,
சொந்தமெல்லாம் அவனே யென வுணர்ந்தேன்! 117

உணர்ந்தேன் ; உயிர் விழித்தேன்; உன்னில்
நீர் மண்ணாய் நீக்கமறக் கலந்தேன்! - மூச்சுப்
பேச்சு அனைத்திலும் அண்ணல் பாதம் கண்டேன் -வாழ்வின்
கலங்கரை விளக்கமென கண்ணனைக் கண்டதனால்
கரை சேர்ந்தேன்! 118

சேர்ந்தேன் சிந்தனையிலுறைந்தவன் ஊரை,
வாழ்ந்தேன் வண்ணமணிப்பொற் பாதம் கீழ்,
தாழ்ந்தேனிலேன் தங்கப்பதுமைதனை அறிந்ததனால் -
வாழ்வில்
மீந்தேன் புண்ணியத்தைப் புணர்ந்ததனால்! 119

புண்ணியத்தைப் புணர்ந்ததனால் புரவலனையறிந்தேன்,
புன்னகையில் பூத்த வைகுந்த நிலவில் -என்
பொன்னகையும், புதையலும், பூலோகசொர்க்கமும்,
நன்னெறி கொண்டு நாடியே ஓடிவந்தது! 120

வந்தது; நின்றது; நின்றே நெஞ்சம் புகுந்தது;
புகுந்தது; புனிதமாக்கியது; புனிதத்துள் புனிதமாய்,
புதுப்பொலிவு காட்டி யென்னில்மூழ்கியது! - மூழ்கியே,
முத்தாய்மாறி, சதைக்கூட்டை சந்தனக் காடாக்கியது!
121

ஆக்கியது பொறுமைச்சமையலே! - அடிக்கமலம்
பற்றியதும் பெறும்புதையலே! - கண்
காட்டியதும் கண்ணன் கழலே! -இன்று
ஊட்டியதும் உவகையின் பாலே! 122

பாலே எண்ணமாய், பளிங்குக் கல்லழகே
மால்வண்ணமாய், உந்தி,உந்தி, உவந்து,
உடல் நோன்பு மறந்து, தெறிக்கின்ற மருந்தே,
தருமத்தின் தலையெல்லாம் தங்கமென் காலே! 123

காலே எனை வழிநடத்தும், கதிர்வீச்சே ஒளிகொடுக்கும்,
மாலேப்பிழைக்கவைக்கும், மனமூச்சே களிகொடுக்கும்,
நாளெல்லாம் கிடந்துபடும் அல்லல் யாவும், இந்த
ஊரெல்லாம் துதிக்குமவன் கால் கண்டாலே மாறும்! 124

மாறும் யாவும் மாயவன் தோற்றம், புவியில்
நாளும் மலரெல்லாம் நாயகன் கூட்டம், வாழ்வில்
தேரும், திருநாளும் செந்தூரக்கண்ணன் கோட்டம்,
கூறும் வினையாவும் கோபாலகிருஷ்ணன் நாட்டம்! 125

நாட்டம் கொண்ட மனதிலெல்லாம் திருநடனம்!
பாட்டும், கும்மியும் பரந்தாமன் களிநடனம்!
காட்டும் ஊர்கண்ணனூர், எனைவாட்டும்
பாடெல்லாம் அவனால் களிப்பூர் ஏகாதோ? 126

ஏகாதோ என்ற உயிர் இருக்கும், எம்பிரானை
நினைந்து, நினைந்து அன்பிலூறி - ஆசைகளை
ஆண்டவனின் பாதத்தில் அர்ப்பணித்து - உலக
உவகையுடன் எதிர்கொண்டால் வெற்றி வாழ்க்கை! 127

வாழ்க்கை என்பதோ கணம் தோன்றி மறையும், நீர்க்குமிழி,
மானுடரெல்லாம் அதில் புகும் காற்றடக்கி,
உலக மென்பதோ நீர் நிறைந்து நிற்குமிடம்,
நீங்காதிருப்பவனே நெடுமா லெனும் நீராகும்! 128

நீராகும் இவ்வுடம்பில் பூச்சிப்,புழுப் பிறக்கும்!
காரான மனதினிலே களவுகள் கணம், கணம் தோன்றி
மறையும்,
ஆசை வெள்ளமோ மனதை யடித்துப்பிழிந்து சாறாக்கும்
·தெய்வ
ஓசை ஒன்றறிந்தாலே உத்தம வாழ்வு கிடைக்கும்! 129

கிடைக்கும் எல்லாம் கிருஷ்ணனின் பிச்சை,
புடைக்கும் வயிறுமவன் புண்ணியத்தின் இச்சை,
நடந்து, கிடந்து, படர்ந்து தொடரும் எளவாங்கா
பரந்தாமக் குன்றிலிட்டப் பவள விளக்குகள்! 130

விளக்குகள் பிறப்பதெல்லாம் வீரனவன் கோவிலேற்ற,
வெளிச்சத்தின் பிறவிமூலம் பெருமாளின் நீலநயனம்,
களிப்பென்று சொல்வதெல்லாம் கண்ணனை
நினைந்தாடும் குணம்
எங்கள் நினைப்பென்று இருப்பதெலலாம் நிரந்தரனின்
அருட்கோலம்! 131

கோலம் புதிதோ? கொற்றவன் நீதான புதிதோ என
குற்றங்கள் புதிதோ? கோபாலன் குமிழ்ச்சிரிப்புபுதிதோ?
சுற்றங்கள் புதிதோ? சுற்றித்திரியும் மனந்தான் புதிதோ?
சுட்டெரிக்கும் சுந்தரமே, சொல் எனக்கு நல் பதிலே! 132

பதிலேது உன் கண்ணை யான் பார்க்கும்போது,
மதிலேறும் பூனைபோல் மனமது ஆடுதய்யா,
மத்தளங்கள் அடிவாங்குவதுபோல் வாழ்க்கையும்
ஆச்சுதய்யா,
இத்தலத்தில் என் பிறவிக்கடன் என்றுதான் தீருமோ? 133

தீருமோ தீயபழக்கங்களின் சொந்தங்கள்,
மாறுமோ உனைக்கண்டே என் மனமும்,
கார் மூடும் நிலவு போன்றே காலமெல்லாம்,
இருந்தநிலை மாறிளப்போது துன்பம் ஓடும்? 134

ஓடும் வெறும் வாழ்க்கை ஒருநாள் மாயும்,
சாரும் பொய், களவுகொலையாவும் சாயும்,
நேரும்இன்ப, துன்பங்கள் இப்பூமியிலே எரியும்,
மீறும் புண்ணியமே எம்பிரானைச்சேரும் ! 135

சேறும் மனிதர்கள் சேர்க்கையிலே வாழ்வு உழலும்,
சொந்த, பந்தம் மாயைக்காட்டி கண்ணை மறைக்கும்,
தேயா சொநதமென நாரணனை உணர்ந்திட்டால்,
மாயா வுலகமே மறைந்து பின் ஒளி கிடைக்கும்! 136

கிடைக்கும் பணம், பொருள், சொத்து, சுகங்கள்,
கவைக்கும் உதவாத பாவத்தின் பாரங்கள்,
சுவைக்கும் மனிதர்களோ தினம் பிணம் உண்ணும்
கழுகுகள்,
மிதக்கும் எண்ணங்களை மீட்பவனிடம் தந்துவிடு! 137

தந்துவிடு நிம்மதியெனும் பெருஞ்சொத்தை.
வெந்துவிடும் உலகவாழ்வெனும் நெருப்பால் மனது -யான்
கண்டுவிட்ட பலகோடிச் சூரியனே! -எனக்கு
களிப்பெய்தும் பொழுதும் வாராதோ? 138

வாராதோ வண்ணமலர் பூம்பாதம் காணும் பேறும்,
பாராயோ மணிவண்ணா இப்பாவிதனை ஏரெடுத்தும்,
நேர்நின்றேன் ; நெறிப்படி வாழ்ந்தேன்! - ஆனாலும்
காணேனே யமைதி, கண்ணபெருமானே! 139

கண்ணபெருமானே! யான் காணாப் பரம் பொருளே!
பொய்யுடம்பில் மெய்யெனவே வந்த பெருமாளே!
எண்ணிலடங்கா உன் கருணை, என் நோய் மருந்தே -நீ
பண்ணிய காரியங்கள் பரந்தாமா எத்தனையோ? 140

எத்தனையோ தவறிழைத்தேன்! எண்ணமுடியாப்
பொய்யுரைத்தேன்
அத்தனையும் பார்த்திருந்தாய்; அருளுடனே பாடச்சொன்னாய்
குறைநீக்கிப் பெருவாழ்வு பெருமாளே தந்துவிட்டாய்! என்னை
மறைகாணவைத்து, மமதையை ஒழித்துவிட்டாய்! 141

ஒழித்துவிட்டாய் ஒருமித்தே என் குற்றங்களை,
பெற்றவர்கள் நட்டாற்றில் விட்டாலும்,
பெருமானே நீ என்னை சேர்த்தணைத்தாய்! -நான்
இப்புவிமேலே பெரும் பேறு உன் பிச்சையைய்யா! 142

பிச்சையய்யா, பெருமானே நானுமுனக்கு,
எச்சமிடும் எண்ணங்கள் ஓட்டிவிட்டேன்,
மிச்சமில்லை துன்பங்கள் யெனை அடைவதற்கு,
தஞ்சமென வந்தேன்! தயாபராக் காப்பாற்று! 143

காப்பாற்று கந்தவேல் மாமனேக்காப்பாற்று,
ஒப்பற்ற தெய்வமும் உன்னிலடக்கம் - இங்கு
வேறேது தெய்வமே, உனையன்றி -என்
நெஞ்சுக்குள் கோவில்தந்தேன், நிமலனே ஓடிவா! 144

ஓடிவா ஒருமையின் பெருமையே, திருவருளே,
ஆடிவா கனிவான நிலவழகே, அருட்பொருளே,
பாடிவா பைய்யப்பறந்து வரும் தென்றலே -நெஞ்சம்
கூடிவா கொற்றவனே, கோளப்பொருஞ்சுடரே! 145

பெருஞ்சுடரே! அருள்மலழையே! ஒளிப்பிழம்பே உயிர்வடிவே!
கருப்பொருளே! காதற்செடியே! கொழுகொம்பே! கோமுகமே!
பரம்பொருளே! பைந்தமிழே! பனிவிளக்கே! பகல்நிலவே!
திருவருளே! தீச்சுடரே! தென்பாண்டிக் குலக்கொழுந்தே!
146

கொழுந்தேபோல் எனக்குள் வளர்ந்தாய்,
குறு,குறுக்கும் கொடியெனவே உள்ளேப் படர்ந்தாய்,
பூவைத்துக் காய் காய்க்க புண்ணியப்பழும் பழுத்தாய்,
ஜடமாய் இருந்த யென்னை மனிதனாக்கப் புனிதமெல்லாம்
சாறாக்கினாய்! 147

சாறாக்கினாய்! வேரில் விளையும் பழமாக்கினாய்!
நறுமணங்கமழும் நல்லப் பூவாக்கி, வாசம் தந்தாய்!
வழிமாறிப் போகையிலே கைகாட்டி மரமாகினாய் -என்
கண்கெட்டபோதும், ஒளி தந்து விழியாகினாய்! 148

விழியாகினாய்; நல்விருந்தாகினாய்; வேதங்கள் பேசும்,
வழியாகினாய்; வாணாளின் ஒளியாகி உயிராகினாய், -என்
மன வோட்டம் கண்ட பெருமாளே, உந்தன்
கால் தடத்தின் தூசாகி உலகை வெல்வேன்! 149

வெல்வேன்; வென்றதை வீரனின் கால்வைப்பேன்,
என்னால் எதுவாகுமய்யா? எல்லாமே உன் கருணை,
அழிகின்ற சதைக்குள்ளே, அழியா ஆன்மா நிலைப்படுத்தி,
ஒழிகின்ற உலகவாழ்வில் ஓர் ஒளியாக வந்தாயே! 150

வந்தாயே! வாழ்வித்தாயே! தந்தாயே! தந்தையானாயே!
விந்தையிலும், விந்தையாய், விளக்கமொன்றில்லாமல்,
நிந்தை செய்வார் நிலையும் மறந்து, நீள்புன்னகையுடன்,
மந்தைமக்கள் கூட்டத்தில் மனிதனாய் யெனை
நிலைப்படுத்தினாயே! 151

நிலைப்படுத்தினாயே, நீக்கமற எனக்குள் ஊடுருவி,
நில்லாஉடம்புக்குப், பொல்லாமனிதர்கள் போற்றும்
புகழினையே,
கல்லாமையுள்ளவன் கற்றறிந்து பேசுதற்போல்,
உள்ளவைக் காட்டியென்னை உய்வித்தப்பெருமாளே!152

பெருமாளே உன்னா லென் மனது என்று முனை
யசைபோடும்,
அதனாலே அருளாளன் அருள் வீடுகண்டே மனமும்,
குதித்துக், குதித்துக்கொண்டாடும் - சண்டாளர்,
பதித்துப், பதித்து வைக்கும் பாவஅடியையும் உணர்ந்து
விடும்! 153

விடும் ஆசை எல்லாமே மாந்தர் சொத்து - அதனால்
படும் பாட்டைப் பரந்தாமன் நீகண்டு சிரிக்க
காலத்தை உணராதார் கதைத்துக், கதைத்து - மாயக்
கண்ணனின் காலடியை மறந்து நரகத்தில் வீழ்வாரே! 154

வீழ்வாரே துன்பப்படுகுழியில், மானுடத்தை மறந்தோரும்,
தாழாத நிலையுணர்ந்தார் ; தரணிமகன் உன்னில் மூழ்கி,
கலியுகத்தின் பாவத்தைக் களைந்து வாழ்ந்திடுவார்,
கண்ணபிரான் உன்னருளால் உயர்ந்து நின்றிடுவார் 155

நின்றிடுவார்; நினைந்து,நினைந்து ஏங்கிடுவார்,
கன்றிடும்படி நெற்றி பூமியில் படவே, விழுந்து நடித்திடுவார்,
வென்றிடும் எதுவும் உழைக்காமல் பெற்றிடுவார்,
தோன்றிடும் மனிதரிலே சிறுபுல்லினும் கீழானவர்! 156

கீழானவர் மேல் வரவே நீலமேகன் துணைவருவான்,
பாழான வாழ்வெல்லாம், பழங்கஞ்சியாகட்டும் - கண்ணில்
சீரான வாழ்வொன்றேப் பட்டு எங்கள் சீராளன்,
மேலானப் பாதங்கண்டே மனங்குதிக்கட்டும்! 157

குதிக்கட்டும்; குன்றேறி கொற்றவனைத் துதிக்கட்டும்,
மதிக்கட்டும்!மனமேறி மாயவனில் மூழ்கட்டும்,
மணக்கட்டும்! மாயவனின் தூய எண்ணங்கள் தினம்,
சிறக்கட்டும்! சித்தூதும் சின்னவனின் புகழ் மட்டும்! 158

புகழ்மட்டும் என எண்ணுவதெல்லாம் உன் பாதம்,
கதிகெட்டுத் திரிந்த மனம் என்பதெல்லாம் என்பாவம்,
மதியென்று வந்தவனே, மனதுக்குள் புகுந்தவனே,
மாயவனே; கோவிந்தா, எல்லாம் உன் செயலே! 159

உன்செயலே நானின்று உனை நினைப்பதுவும்,
எனக்குள்ளே வேறில்லை, நாரணனை நினைப்பதன்றி,
கண்ணுக்குள்ளே வைத்து, நெஞ்சுக்குள்ளேத் தாலாட்டும்,
கண்ணனெனும் தாய் என்னைக் கண்டு கொண்டாளே!
160

கண்டு கொண்டாளே என் மனைவியும் உன்னாலின்று,
உண்டு கொழுத்த சதையகங்காரம் ஒழியுமட்டும்,
கண்டு,கண்டு காணாமல் செயும் உன் செயலை -நான்
கண்டு கொண்டு கருத்தொருமிப்பதும் எந்நாளோ? 161

எந்நாளோ இவ்வுடம்பில் நீ ஒளியேற்றி வெளிப்படுவதும்,
எந்நாளோ பூ வாழ்க்கைவிட்டே, உனையடைவதும்,
எந்நாளோ உன்னெண்ணங்களை யான் செயல்படுத்துவதும்,
எந்நாளோ என் குறிக்கோளும் யுனைச் சேர்வதுமே! 162

உனைச்சேர்வதும் தேனுக்குள் புகும் பாலொப்பும்,
மனைசேர்ந்தப் பெருமாளை, மனம் சேர்க்க அள்ளும்,
தினம், தினம் காணும் வீண் துக்கங்க ளின்றே,
மனம் விட்டே ஓடட்டும் ; மாயவனைச் சேரட்டும்! 163

சேரட்டும் செல்வங்கள் மலையெனவே,
கூறட்டும் உன் புகழும் மாண்பெனவே,
மாறட்டும் இவ்வுலகம் பொய்யை விட்டே,
மயங்கட்டும் உன்காலடியில் ஞானம் விட்டே! 164

விட்டேனில்லை உலகசுகம் எதையுமே,
பட்டேனதனால் பெரும்பாடே, -உலகில்
கெட்டதொன்றேயான் பெற்ற பெருஞ்செல்வம் -பெருமாளே
பட்டமரமென்னில் பசுமையைத்தான் விதையாயோ? 165

விதையாயோ வீணான என் மனதிலும் நல்லதையே,
கதைபேசித்திரியும் இந்தக் கறுப்பு மன மாந்தரெல்லாம்,
பகட்டுலகில் பணத்திற்காய்ப் பறந்துனை மறந்தார்,
பகவானையறியாமலே பணச்சேற்றில் தினமுழன்றார்! 166

உழன்றார்; உருண்டார்; திரண்டார்; மருணடார்;
காணார்; கழன்றார்; அருளார்; அசையார்!
மனம்போனபடி மேயவிட்டு பயிரையே இழந்தார்!
பகல்கனவுக் கண்டு, கண்டு பாரத்தைச் சுமந்தார்! 167

சுமந்தார் இந்நாள் வரைபொய்மூட்டை தன்னையே,
மிதந்தார் நீரில்லாக் கானலிலே வீண் பெருமையுடனே,
மறந்தார் உனை மனக்கண்ணின் கருத்திலிருந்தே,
பிறந்தார் கலிக்கே துணையாய் இவ்வுலகில்! 168

இவ்வுலகில் தோன்றி, மறைவனவெல்லாம் உன்னருளே!
பொய்யுலகில் புரள்வோரே, புரவலனை நீரக் கண்டுவிட்டால்,
மெய்யுலகம் என்ன வெகுதூரமோ? - நம்மில்பலர்
கைய்யகல அறிவுதன்னைக்கடலென நினைப்பது
மூடமல்லவா? 169

மூடமல்லவா முரளிமனோகரனை மறப்பதுவும்,
பாடமல்லவா பாகவதம் தன்னைக் கேட்பதுவும்,
ஞானம் என்பதே நாரணன் பாதமல்லவா?
வேதம் நான்கினும் மூத்தநாயகன் முதல்வனே! 170

முதல்வனே; வளவனே; முக்கண்ணன் மைத்துனனே,
நாதமே; வேதமே; நான்முகன் தகப்பனே! - உன்
பாதமே சரணம்! உன்னருள் தரனும்!
மோதகக் கையோன் மாமனே! அருள்வாயே! 171

அருள்வாயே எல்லாமும் நான் பெறவே,
பெற்றபொருள் எதுவாயினும் தருமஞ்செய்ய.
கற்ற வித்தையத்தனையும் கடிமனமேற்ற நீயே,
உற்றவனாய் உட்புகுந்து என்றும் நிலைப்பாயே! 172

நிலைப்பாயே நீங்காதுனை நினைப்பவர் மனத்தினிலே,
மலைப்பாய்க்கருதும் பேரின்பம் மாயவனுன்னால்,
களைப்பு நீக்கிக் கருவாகி, திருவாகி மலருமென்றோ -என்
பிழைப்பு எல்லாம் பித்தன் மைத்துனனை எண்ணுவதே!
173

எண்ணுவதே உனைப்பற்றித்தான் - நெஞ்சில்,
ஏற்றுவதே உன் தீபந்தான் - கண்ணில்,
காண்பதெல்லாம் உன் காட்சி தான் - பையயில்,
வைப்பதெல்லாம் உன் பிச்சைதான்! 174

உன்பிச்சைதான் எனை உயர்த்தேற்றும்,
உன் கருணைதான் எனக்கு வெற்றியாகும்,
உன் அருளே என் வாழ்வின் செல்வமாகும்,
உன் வழியே என் நட்பின் கதியாகும்! 175

கதியாகும் விதியே, கடைத்தேற்ற நீவா!
மதியாகும் பதியே, மணங்கூட்ட நீவா!
துதியாகும் துணையே, தொழிலுக்குள் நீ வா!
சதியாகும் உலகை, அழிப்பதற்குள் நீ வா! 176

நீ வாவென்றால் நிறம் பார்க்காமல் ஓடிவரும்,
எந்தை ஈசன் துணைவித்சோதரனே, -உந்தன்
அடிவருடி யான் யென்பதே இவ்வுலகில்
யான் வாங்கும் பெரும் பேறாம்! 177

பேறாம்! புகழாம்! பெருஞ்செல்வமாம்! உயிராம்!
புழுக்காய்த்து நாறுமிந்த சதைமரத்தில்,
தொழுதே பலநோய்ப் புகுந்து மேலும் துன்பம் தரும் - என்
பழுதில்லா நாதனைப் பணிந்தாலே நல்ல பலன் வரும்!
178

வரும் யாவும் உன் தயவன்றோ? -உலகில்
பெறும் சுகம், துக்கம் எதுவும் உன் பிச்சையன்றோ?
ஆதியுன்னை அறியாமல் ஆழிசேற்றமிழ்வதும்,
நீதியற்ற என் நெஞ்சினால் தானே! 179

தானே எத்துன்பமும் வந்துறுத்துவதில்லை,
காணாத எதுவும் பகைமை வளர்ப்பதில்லை,
தேறாத மனிதனே அழிவின் தொடக்கம்,
மாறாத வுலகில் மாயவனே வாழ்வின் விளக்கம்! 180

விளக்கம் கலக்கத்தின் மரணம்,
பழக்கம் மனுகுலத்தின் வழக்கம்,
தயக்கம் வெற்றியின் தோல்வி,
மயக்கம் மனிதனின் முடிவு! 181

முடிவுக்கு விடிவான மதுசூதனா!
மடிவதெல்லாம் இவராசையால் தானே
படிப்பறிவு, பகுத்தறிவு, பட்டறிவு நீயே,
துடிப்பிருந்தால் நெஞ்சில் தூயவன் நீ வருவாயே! 182

வருவாயே வண்ணவடிவேலன் மாமனே!
தருவாயே பழுதில்லா கர்மம் தன்னையே!
சரணடைந்து உன்னைத்தொழுதவர் உள்ளம்,
மரணத்திலும் பயமில்லாமல் மகிழ்ச்சி யிலாடும்! 183

ஆடும் இவ்வுலகம், ஆழிசூழ் ஏழுலகம்,
பாடும் காற்றும், பரந்தாமன் குழலும்,
நாடும் உள்ளமும், நாரணன் விளையாட்டும்,
தேடுமிடம் வந்திடும், தெய்வ மணங் கமழ்ந்திடும்! 184

கமழ்ந்திடும் கண்ணன் காலடியே சரணம்!
அமிழ்ந்திடும் எண்ணம் அவனிடமே பூரணம்!
உமிழ்ந்திடும் எதுவும் உற்றவன் பிச்சையாகும்!
குமிழ்ந்தாடும் கோலப்பாம்புடையோன் என் சொந்தமாகும்!
185

சொந்தமாகும்! சொக்கத்தங்கமாகும்! மனம்
பாந்தமாகும்! பக்குவஞானமாகும்! தினம்
சாந்தமாகும்! தெய்வமோட்சமாகும்! கணம்
சேதமாகும்! தீயவையெல்லாம், நாராயணா! 186

நாராயணா! நமச்சிவாயன் மைத்துனா!
வாமனா! மதுசூதனா! திருவிக்கிரமா! - என்
திருவரங்கப் பெருமாளே! தெய்வத்திற்கு
தெய்வமான திருப்பதி ஸ்ரீ வெங்கடேசா! 187

ஸ்ரீவெங்கடேசா! வேணுகோபாலா! கானராகவ!
பிரம்ம சூத்திரா! வேதநாயகா! ராகமோகனா!
தேவநேசனே! தெய்வ பாலனே! ஞானவானமே!
பாண்டுரங்கனே! பரந்தாமனே! கோவிந்தனே! கோபாலனே! 188

கோபாலனே! பண்டரிநாதனே! நரசிம்ம நாயகா!
உனை எண்ணாத நெஞ்சும் ஒரு நெஞ்சா!
உனைத்துதிக்காத கையும் ஒரு கையா! -என்
கண்ணே! நீ இல்லாத நினைவும் ஒரு நினைவா? 189

நினைவான நிலவே ! நீங்கா அருளே !
கனவான வாழ்வே ! களங்கா உள்ளமே !
தினமானப் பொழுதே ! தேங்காத நீரே !
மணமான வுன்னால் மனம் நாடியே நின்றதுன்னை ! 190

உன்னை எண்ணியே விதைவிதைத்தேன் ! -உன்
வாசல் வந்தே கதவைத்தட்டுகின்றேன் ! -இரு
கையேந்திப் பிச்சையெடுப்பதுமுன் காலடியே ,
என்றைக்கும் இப்புவியில் நானேயுன் இரவலன் ! 191

இரவலனானாலும் பெருமாளின் இரவலன்,
எச்சமிடும் இழிபிறவியானாலும் அவனின் ஈனம்,
முத்தமிடும் மோகனமானாலும் அவனின் இராகம்
யானெத்தெனை எதுவானாலும் என் பகவானின்
சொந்தம்! 192

சொந்தம் எனச் சொல்வதெல்லாம் சொந்தமில்லை,
பந்தம் என வருவதெல்லாம், பந்தமில்லை!
பாசம் என்று போடும் வேடம் வெறும் பசப்பு,
நேசம் வைத்துக் கழுத்தறுப்பார் நீயேக் காப்பு! 193

காப்பு வந்து கையிலேறும் நேர்மைவிட்டால் -தவறு
தோப்பு போல் வளர்ந்துவிடும் பாவநிறத்தால்,
கண்டு,கேட்டு,உண்டு, உயிர்த்த எதுவும் -என்
பாண்டுரங்கன் போலாகுமோ பாரினிலே ! 194

பாரினிலே உன்போன்ற தெய்வமுண்டோ ?
கார்முகில் மறைத்த அம்புலியாய் அழகுஊறும்,
அனந்தசயன அருட்பெரும்பொருளே - உன்னில்
எல்லாமும் இணைந்ததய்யா எம்பெருமானே ! 195

எம்பெருமானே ! ஏந்தலே ! இடையர் தலைவனே !
செம்பொன்னே ! செந்தூரமே ! தென்னவர் குலமே !
எங்கும் ஒளிவீசும் உன் எழில் முகம் கான,
பொங்கும் மனந்தன்னைப்புரியாமல் இருப்பதேனோ ? 196

ஏனோ, இப்படி மௌனித்துச் சிரிக்கின்றாய் - யான்
காணாதக் கனவே ! கன்னலே ! தேனே ! - உன்னை
வேண்டாத நேரமில்லை ! வீணே வாழ்ந்ததில்லை !
நேராததுன்பம் நேர்ந்ததென்ன? நெஞ்சிலே முள்
தைத்ததென்ன? 197

முள் தைத்ததென்ன ? முண்ட தீ சூழ்ந்ததென்ன ?
உலக துன்பம் உறுத்துவதென்ன? கண்ணில் கள்ளிப் பால்
பட்டதேபோல் வாழ்வில் துயரம் வந்ததென்ன ? -என்
கண்ணா காதல் கொண்டேன் உன்மேல், வாழவிடு ! 198

வாழவிடு என்னை உலகயின்பம் சூழ்ந்து கொள்ள,
பாழ்மனிதர் வைத்திருக்கும் செல்வமெல்லாம் எனக்கருளி,
ஊழ்வினைப்போகுமட்டும் தருமஞ்செய்ய -தர்ம
தயாளன் நீ மனது வைத்தால் நன்றன்றோ ? 199

நன்றன்றோ தீயவர்நட்புக் களைவதுமே, -நான்
என்றென்றும் யுனை நினைப்பதும் தினப்புண்ணியமே!
மின்னிடும் ஒளிவெள்ளக் கிழக்குச்சூரியனே -என்
கண்ணிலாடும் மின்னலே, கருப்பழகே! 200

கருப்பழகே! கரிமாறியாகும் சுத்தவைரமே!
மறுப்பேதும் இல்லாத உன்னன்பினுக்கே,
புண்ணியமே செய்ததனால் உற்றவனானேன்!
யானெண்ணிய யெண்ணமாய் இருக்கும் பேரொளியே!
201

பேரொளியே! பெருமையின் கருவானப் பொறுமையே!
அருளாளர் அழைத்துவிட்டால் அன்புமுகம் காட்டும் சுடரே!
பொருள்வேண்டியுன்னை மறந்தவரால் -மனித
அருள் ஏது செய்ய இங்கியலுமோ ? 202

ஏதுசெய்ய இங்கியலுமோ இவ்வுலகில் என்னால்,
எதுவும் உன் செயலன்றோ, உத்தமனே இந்நாள்,
ஓடும்வண்டி ஒன்றென்றாலும் ஆதாரம் அச்சே,
பாடும் மனம் இதுவானாலும் பகவானே அத்தாட்சி! 203

அத்தாட்சி என்பதெல்லாம் ஐயன் கருணைதான்,
அச்சில்லாமல் எந்தவண்டி ஓடும் ? -புவியில்
ஆண்டவனில்லாத வாழ்வும் ஒரு வாழ்வா ?
அடியேன் தலையென்றும் நாரணப்பாதத்தில் ! 204

நாரணப்பாதத்தில் தலைவைத்தவர் தலையே
பெருந்தலையாகும்,
உன் வாதத்தில் ஈடுபட்ட நாவே புண்ணியம் பெறும்,
உன் எண்ணத்தில் நீந்தும் கருத்தே வெற்றிதரும்!
உன் வண்ணத்தில் லயித்த உயிரே சொர்க்கம் புகும்!
205

புகும்; புறப்பட்டுத்தங்கும்! மிகும்; மீண்டு,மீண்டுமீண்டும் வரும்!
நீங்கும்; நல்லதைநாடும்! மருகும்; மறுபடி,மறுபடிமறுபடியும்
ஆறும்!
ஏந்தலின் விளையாட்டை என்னவென்பேன்? -என்
வாழ்தலின் உயிரே உள்ளவனின் தொழிலென்பேன்! 206

தொழிலென்பேன்! தொடர் உறவென்பேன்! -அவன்
உயிரின் விழிப்பில் வரும் மூலம் என்பேன்! - என்
இருகண்ணே, கருமணித்தாங்கும் கண்ணின் ஒளியே என்பேன்,
உருவெளித் தோற்றம் கண்ணனில் மூழ்கக்காண்பேன்!207

காண்பேன் அந்தன் மாமனைக் காதலுடனே,
வீழ்வேன் மனமே, விதி படைத்தவனைத் துதிப்பதற்கு,
வேண்டேன் மதங்கொண்ட இம்மாமனதை நானுமே,
வாழ்வேன் வண்ண ஒளிச் சூரியனுக்காய் இன்றே! 208

இன்றே கண்டேன் ஒளிப்பிளந்து வானெழவே,
நன்றே யுணர்ந்தேன் நாரணன் தாள் தன்னையே.
அன்றே வந்து, அருகிட்டு அழைத்து அன்பு செய்தவன்,
நின்றே நெஞ்சில் பூத்தான் ; நிறைந்து நின்றான்! 209

நின்றானெனை, வென்றான்! நன்றே செய்தான்!
நாணிலத்தா ரெனைவுணர, நாளும், கோளும் சாதகம்
செய்து
விண்ணின்ற ஜோதியே வீட்டில் புகுந்தொளியேற்றுவதாய்,
தண்ணெனவே என் தாமரைக் கண்ணன் வந்தான்! 210

வந்தான்; வரம்பல தந்தான்! -உலகில்
நின்றான்; உருவாகி உயிரில் கலந்தான் -வாழ்வில்
பயிற்றானினிமை, பயமென்பதையே யொழித்து,
கனன்றான் நெருப்பெனவே, பக்தர் நெஞ்சில்! 211

நெஞ்சில் ஒரு விடியல் நிகழக்கண்டேன்,
நேரமெல்லாம் கண்ணன் காதலுண்டேன்,
உறவு கொண்டு, பிரியும் நிலையில்லாது, -நீரில்
மறைவுகொண்டு கலக்குமுப்பாக வுறைந்து நின்றான்! 212

நின்றான்! நினைவில் சுழன்றான்! பிசிறில்லா ஒளி பீய்ச்சி,
இருட்டை வென்றான்! இதயத்துள் நுழைந்தான்!
கலந்தான்! கருவறையின் திருப்பொருளாய் மலர்ந்தான்!
மகிழ்ந்தான், இப்பாவிதனை சுத்தி செய்த செயலினிலே!
213

செயலினிலே செவ்வேள் மாமன் சக்கரம் சுழல,
உயர்வினிலே உத்தமன் சங்கே வெற்றிதர,
என்ன புண்ணியம் செய்தேன், ஏந்தலை நினைப்பதற்கு,
கண்ணெல்லாம் காதல் நீர், கனகமவனைத்துதிப்பதற்கு!
214

துதிப்பதற்கும் தூயவன் அருள்வேண்டும்! -நம்மைப் பிறர்
மதிப்பதற்கும் அவன் விதிசெய்து அனுப்பவேண்டும்,
குதிப்பது நெஞ்சுதானானாலும், குணக்குன்று அவனாலே,
விதிப்பது நடந்துவிடும்! வீம்பென்ன மதிமேலே! 215

மதிமேலே ஓர்மயக்கம் மன்னவனே! -இக்
கதிவேண்டாநிலை யாணவத்தால் உதித்தது தானே!
பதியுன்னைக்கண்டு விட்டால் பாவம் போகும்!
நதிபோல் உருவாகி, நயமுடனே வந்துவிடு! 216

வந்துவிடு வண்ணவொளி அழகினழகே!
தந்துவிடு உன் காலடியின் அழகினருளை!
பெற்றுவிடுமெதுவும் பெருமாளின் அழகிரவல்!
விற்றுவிட ஏதுமில்லை, எல்லாம் என் நாயகன் தீர்ப்பு! 217

தீர்ப்பு எல்லாம் கருணைபூசிய அன்பல்லவா?
திருவாளரென சூட்டும் பெயரல்லாம் பொய்யல்லவா?
மணவாளன் உன்னருள் முன்னே எதுவும் நின்றிடுமோ?
குணாளா குட்டிச்சுவரென்னைக் கோட்டையாக்கவா! 218

வாசமலர் நாராயணா உன்னருளே எந்தன் பக்தி,
என்னால் எதுவுமில்லை எனதென்பதும் எதுவுமில்லை,
மின்னலொளியே! மீளாயின்பமே! -உன் மீது
பின்னலாய் பாசம் வைத்தேன், பின்னேது வேண்டுமய்யா!
219

வேண்டுமய்யா விளைகின்ற நன்மைகள் யாவும்,
தூண்டுதய்யா மனம், உன்னருள் முகமே வெற்றிகள் யாவும்,
பூண்டுவிட்டேன் விட்டலனின் பக்திவேடம்,
மாண்டபோதும் மறவேன் மாதவன் பாடம்! 220

பாடம் புதிதல்ல! பழக்கமும் எனதல்ல! உவகையின்
பொருளே! ஒளிவாங்கும் உயிரே, திருமலையே,
என் பிழைப்பென்பதும் நீயே, அதன் பலனும் நீயே,
கண்வண்ணம் காட்டும் கண்ணாளா, கருணைவை மணாளா!
221

மணாளா உன்னாலின்று உவகை வாங்கினேன்!
பாவவூர் நீங்கி, புண்ணிய நகரடைந்தேன்!
பொருள் நரகம் கைவிட்டுப் பூமியிலே,
அருட்பதமடைய அண்ணலை வணங்கினேன்! 222

வணங்கினேன் வாசமலர் வேதநாயகனை,
பிணங்கினேன் பெருமாளின் அன்புடனே,
கணங்களின் நாயகன் கண்ணெடுத்துப்பார்க்க,
நிணங்களின் ஆசை நிர்வாணமாகக் கண்டேன்! 223

கண்டே னொரு கருப்பு நிலாவை - அது
கைய்யில் வரக்கண்டேன் அன்புடனே,
சதையில் செய்த இப்பாண்டமும் - இன்று
மமதை யழிந்து மணிவண்ணன் பாதம் நாடியதே! 224

நாடியதே என்மனமும் நமனுறவை,
தேடியதே நரர்களின் நல்வரவை,
பாடியதும் பாவிகளின் பதம்பற்றியே - அதனால்
கூடியதும் மரணப்பழி இந்நாளிலே! 225

இ[illegible]லே [illegible]வொரு அடைய நேர்ந்தது!
பொன்னாளிலே [illegible] பருகிப்பருகி மனமும்
களித்தது!
பா[illegible] அதன் மூலமானான் - என்
பாவங்கள் போக்கிடும் பச்சை மேனியானான்! 226

பச்சை மேனியானான் பக்கம், வந்தமனம் சுகம்காணும்
இச்சைவிட்டே [illegible], வென்றமனம் ஏந்தல் வசம்
வரும்!
கர்மைக் கடந்திரிவார் கடைவாய்ச்சிரிபபு மறந்தால்,
நிச்சயமாய் நிமலனருள் நெஞ்சில் நிலைக்கும்! 227

நிலைக்குமென்று நினைப்பதெல்லாம் கானல் நீரே!
மலைக்கு போதும் மகேசன ருளிருந்தால் சுலபம்!
போகின்ற போதினைப் போற்றி . போற்றிப் புகழ்வதென்ன?
சாகின்ற வாழ்க்கையில் சந்தானகிருஷ்ணன் லீலை என்ன?
228

என்ன விலை இந்தநிலை யாறுயர ? - நீ
சொன்னவிலை, சோகமெல்லாம் போக்குமுந்தன் கலை,
மண்மீது பூத்தபிந்த பால் நிலவில் -என்
கண்ணிரண்டும் கண்டு. கண்டு வாழும் உலகில்! 229

உலகில் எதுவும் பெற்று நிலைப்பதில்லை!
மனிதர் யாரும் நிலையாயிருந்து வாழ்வதில்லை!
புண்ணியமும், எதுவும் தேடி வருவதில்லை!
கண்ணியனில் யாரும் கலந்தபின் மறப்பதில்லை! 230

மறப்பதில்லை மாயவனே யுன் கால் கண்டால்!
சிறப்பதில்லை தூயவனே யுன் அருள் காணாமல்!
பிறந்து, இறந்து, சிறக்கின்ற நிலையாவும்,
கிடந்து துடிக்குமுன்னன்பில் அலைமோதும்! 231

அலைமோதும் எண்ணங்கள் ஆசைக்கல்லில் தினம் மோதும்,
கலைகின்ற மேகம் போல் சிறுதுளியாய் அழுக்கும் போக்கும்,
சாவூரில் பயணிக்கும் சவங்களெல்லாம் -நிதமும்
பகவானூர் பாராமல் பரிதவித்து முடிவதென்ன? 232

முடிவதென்ன? விடிவதென்ன? எல்லாமே உன் கையில்,
கைவரும் சொர்க்கமும், சுகமும் எல்லாமுமே யுன் காலடியில்,
இன்ப, துன்பம் என்பது எதுவுமில்லை நாராயணா!
யாவும், யாவுமாய், எல்லாமே உன் செயல் நாராயணா! 233

நாராயணா! நமச்சிவாயன் மைத்துனா! பூபாலா!
பாராயணம் செய்வதெல்லாம் உனைப்பற்றித்தான்!
பாரமில்லா வாழ்வுதரும் உன் கழலடியில்,
சோரமில்லா மனதுடனே துதிக்கின்றேன், நாராயணா!234

நாராயணா, நான் வணங்கும் தேவநேசா!
வெற்றிகளைக் காலடியில் குவித்திருக்கும் கோவிந்தா!
உன் ஞானவடிவில் என் ஊனும், உயிரும் கலக்க,
நான் செய்த பாவங்கள் நமனுலகம் சென்றுவிடும்! 235

சென்றுவிடும் செல்வமெல்லாம் உந்தனடி யுணர்ந்துவிட்டால்,
நின்றுவிடும் செல்வமென யானறிவேன் நாராயணா!
கன்றுபோய் தாய் தேடும் கண்ணனே உன்னை,
நன்று நான் நாடினேன், நானிலத்தில் உயர்வுறவே! 236

உயர்வுறவே என்மனத்தில் நீ புகுந்தாய்,
அயர்வில்லாமல் ஆண்டவனைத்தேடும் கலையில்,
வியர்வை சிந்தி, வீம்பு கொள்ளாமல் பெருமாளை,
பார்வையிலே நிறுத்தி, பக்குவம் தனை மனத்தில்
வைப்பாய்! 237

வைப்பாய் வானகத்தில் யுனை நம்பியவரை,
மண்மீது பூத்தநிலா உன்னால் வளர்வேன் நான்,
கண்ணிரண்டில் ஆடும் கதிர்வேலன் மாமனே ! - நீ
எண்ணிரண்டு வயதுக்குமுன் எனக்குள் புகுந்த சொத்து!
238

சொத்துவெறும் அழியும் பொருள் உலகினிலே -உன்
அருட்சொத்து ஒன்றே பிறந்ததிற்கு அழியாப் புண்ணியம்,
கருப்பொருளாய் மனத்தின் கண் உதித்த ஞாயிறே -உன்
அருட்பெருங்கடலை அடைவதெப்போதோ இந்தத்
தெய்வம்! 239

தெப்பந்தான் இந்த ஆசையுடலம் -இதில்
பயணிக்கும் ஆன்மா வெறும் பயணி, -இன்று
நரமமெனும் துடுப்புப் போட்டு, ஆசைப்பாறை தவிர்த்து,
பகவான் பாதமெனும் கரைசேரும் மகிழ்வுடனே! 240

மகிழ்வுடனே எனச்சொல்வதெல்லாம் உன்னை நினைப்பதே,
மறம எனப்படுவதும் உன்னைத் துதிப்பதே!
புறம் என நினைப்பது அல்லவை நீக்குவது ,
வரம எனபபடுவதெல்லாம் உன்ன ருட்பாதமே ! 241

அருட்பாதமே நான் வேண்டும் பதம்.
குருவருள் என்பதும் கிருஷ்ணன் துணையே,
மருவுர பெண்ணுடலும், மாய்ந்து பெறும் பொன்னும்,
அருகம்புல் ஆயுளினும் அழிந்துவிடு மய்யபோ ! 242

ஐய்யபோ, இந்தக் குருடனுக்கருள செய்தாய் !
புவியிருட்டில் திரிந்த என்னைப் புத்தொளிப்பாய்ச்சி,
கருத்துத் தந்தாய்! காலின் நிழல தந்தாய் - என்
வாழ்வையே தந்தாய் ! நெஞ்சில் வளர்பிறையானாய்!
243

வளர்பிறையானாய் ; வழங்கும் தமிழ்க் கொடையானாய்,
இளம் நெஞ்சில் தைக்கும் கதிரானாய் -என்
மலவுடம்பு நீக்கி, மாவுடம்பு காட்டும் மாதவா, - நான்
வாழ்வதெல்லாம் என்றுமே யுன்னை நம்பி ! 244

உன்னைநம்பி வாழ்ந்தேன்; உண்மையில் வளர்ந்தேன் !
பணம் என்ற ஒன்றை பகவானின் காலிலுணர்ந்தேன் !
தினம் உன்னைத் துதித்தே தேவர் பதவிபெறுவேன் என்றும்
மனமுன்னில்லயிக்கும் மாதவா வெற்றிதா ! 245

வெற்றிதா விமலனே ! வீசுதென்றல் காற்றேறிவா !
சுற்றிவரும் பகைகூட சுந்தரன் உன்னாலேமறையும் - நான்
பற்றிக்கொண்ட திருப்பொருளே, தெய்வமே ஓடிவா !
கற்றது கைமண்ணளவே! கருணைகாட்டக் கந்தன்
மாமனேவா! 246

வா ! வந்தென் பாவங்களைக்கரைத்து நிம்மதி தா!
வாசுதேவன் உன்மேலே காதல் வைத்தேன் !
வாழுலகம் மாறினாலும் வைத்த மனம் மாறாது -என்
ஏழுலகம் நீதானே, ஏழைவாழ்வில் வந்தச் சூரியனே! 247

சூரியனே, சுந்தர உலகின் ஞானரதமே!
பாரினிலே உன்போன்ற தெய்வம் ஏதய்யா !
நேரினிலே வந்து, நெருங்கி பல் இன்பம் தந்து,
யாரினி எனக்கு உதவி செய்வார், உன் போலே! 248

உன்போலே துணை எனக்கு உலகில் யார்? -இரு
கண்போலே கண்ணனுன்னால் பார்க்கின்றேன் !
செய்பவனும் , செய்பிப்பவனும் நீயே -இந்த
செய்பலனும் நீதானே கோவிந்தா ! 249

கோவிந்தா, இராகவா, நீலவண்ணா, நீயே துணை!
யாரிந்த மனிதன் எனக்கேட்கும் நிலை நீக்கி,
வானுயர்ந்த வடிவும், பொருளும், புகழும்
தந்தெனை ஆதரித்த தரணியரசே நீ வாழ்க ! 250

வாழ்க என் வடிவழகா என்றும் உன் அன்பு,
தாழ்க உனைஎதிர்த்து, தீமை புரியும் மனிதர்,
என்றுமே யுன்னால் வாழும் மறவருலகம்,
கன்றுபோல் உன்னையடைந்தேன். கண்வை மாதவா! 251

மாதவா, யான் தாயூரில் தோன்றி -நற்
சேயூரில் வளர்ந்து, பாழூரில் கெட்டேனே!
பரமனூர்ச்சேர பாவியான் என் செய்வதோ ?
தேவனூர் தலைவா, தெய்வமே பெருமாளே நீயே துணை!
252

நீயே துணையென்று உன் கால் பற்றியவர்,
தாயே சரணமென்று உன் திருத்தேவி அடியில் வீழ்ந்தவர்,
மாயேயுன்னில் மூழ்கிய வர் என்றேனும் - புவியில்
பாழே வாழ்வென்று நினைத்ததுண்டா, பரந்தாமா! 253

பரந்தாமா உன்மேல் பைத்தியமானேன் -மனிதன்
பறந்து, பறந்து ஆத்திரத்தில் பாவச்சேற்றில் மூழ்க,
இறப்பும், பிறப்பும் இல்லாத இமயமே,
என்னைக் கைவிட்டால் யாருன்னை நினைப்பதுமே! 254

நினைப்பதுமே என்றும் உன் காலைத்தான்
நிழல்பட நிற்பதும் உன் கோவில் தான்,
நம்பிக்கை என்ற சொல்லின் மூலமந்திரமே -என்
தும்பிக்கையே! பெருமாள் நாமம்தானே! 255

தானே வந்தாய்! தன்னெனப் புகுந்தாய்!
மாலாய் விரிந்தாய்! மணம் வீசித் திகழ்ந்தாய்!
யான்தேடும் கருப்பொருளாய் இன்று நீ வந்தாய்.
ஏழேழுப்பிறவிக்கும் இன்னல் நீக்கும் மருந்தானாய்! 256

மருந்தானாய்! மனிதர்களின் அன்புவூற்றானாய்!
ஊனின் ஊனானாய்! உத்தமர் தம் வடிவானாய்!
என்றும் பேசும் பொருளானாய்! இன்பமானாய்!
உனையெண்ணாத பேர்ப்போகுமுலகு பாழ்நரகே! 257

நரகே இவ்வுலகு! நரர் எல்லாம் பேய்களன்றோ?
விறகே ஆசையெனக்கொண்டு, விரகத்தைத்தீயாக்கி,
பணச்சோற்றில் பாழ்காமக் குழம்பூற்றி,
தினம், தினம் தின்பதென்ன வாழ்க்கையோ? 258

வாழ்க்கையோ ? வானவர் தந்த ஊழ்வினையோ ?
பிறப்பதும், வளர்வதும், ஆசையில் மூழ்கியலைவதும்,
அலைந்தும் மெய்யறியாமல் மேதினியில் உழல்வதும்,
இல்லாததிற்கு இறைஞ்சுவதும் என்ன நிலையோ ? 259

நிலையோ தாழ்ந்தது ; நிமலனை நினைக்காததினால்,
மனமே கசந்தது; மாயவனை எண்ணாதக் கருத்தும்,
தினம், தினம் தெய்வீகம் மறந்து தெருநாயாய்,
குணம் கெட்டலையுது, கொற்றவா வந்துவிடு! 260

வந்துவிடு யான் பொய்வாழ்க்கை ஒழிப்பதற்கே,
கண்டுவிடு காலனை வென்று வாழ்வதற்கே,
என்றுமுன்னுன் மூழ்கி, உலகத் தவமியியற்ற,
நன்று நீ வந்துவிடு, நாராயணாயுனை யறிவதற்கே! 261

அறிவதற்கே ஆறறிவுவைத்தாய், - நெஞ்சில்
தரிப்பதற்கே உன்னினைவை எனக்குத்தந்தாய்,
பக்தியும் பழக்கத்தால் வருவதென்றால் பரந்தாமா- அந்த
சக்தியும் உன்னருளால் என்பதுவும் உண்மை தானே!
262

தானேவந்து, தர்மம் சொல்லி தமிழார்வம் காட்டிவிட்டாய்,
மானே, மயிலே எனவெழுதிய சிந்தை மாற்றி,
மாலே, மாயவா எனஎழுத வைத்து என்னுள்புதைத்தாய்!-
உலகில்
என்னைக் கண்டும் திருப்பாதம் காட்டியதெந்தன் புண்ணியமே!
263

புண்ணியமே புனிதனுன்னால் புகுந்தது ! -நீ
பண்ணிய மந்திரத்தால் பரம் பொருளுன்னை -மனமே
எண்ணியது; யெண்ணி. யெண்ணி இன்பத்தால் - ஆனந்தக்
கண்ணீரும் பெருகியது; கண்ணா நீ தனித்தெய்வம்! 264

தெய்வம் நீ யிருப்பதாலே கலக்கமில்லை,
மெய்யும் உருகுது, உன் மேனிகண்டாலே,
பொய்யும் கருகுது, புனிதனுன் ஒளியாலே,
செய்யும் தொழிலும் சிறக்குது சித்தனுன் நினைவாலே !
265

நினைவாலே நிமிர்ந்து, கணைதொடுத்தேன் கருத்தாலே ,
பிணையானேன் பெருமாளே, பேரொளி நீ தந்தால்,
தோல்வியும், சுத்த அவமானமும் -சூரியன்
கண்ட பனிபோல ஆகாதோ சுந்தரனே! 266

சுந்தரனே ! சுத்த சன்மார்க்க நேசனே !
இந்திரர். வானவர் எத்தனை அற்புதரானாலும் -உன
மந்திரம் உண்டாலே உடலே சிலிர்க்கும் -என்
உயிரும் விழித்து, பிறந்த பயன் அடையும்! 267

அடையும் ஆசையும் [illegible]க்குள் பாயும்.
படைதிரண்டு, [illegible] ஊடுருவி -பாழ்
பலாத்தாசை பாவக் [illegible]யாகும் -நீ
மனம் வைத்தாலே [illegible] ! 268

ஒளிவீசும் உன்பாதம் அறிந்தாலே.
உணர்வெல்லாம் இன்பப் பூ மலர்ந்துவிடும்,
கனவும் நினைவாகும், கருத்தும் கவியாகும் -என்
கண்ணன் புன்சிரிப்பில் கட்டுண்டுக் கிடப்பதே மனமாகும்! 269

ஆகும் செயலெல்லாம் அனந்தசயனன் விருப்பம், போகும்
புழுவுடம்பும், புழுத்தே மரணத்தை நாடும்,
சாகும் வரைக்கும் சதையில் கிடந்து மாளும்,
ஏகும் நிலையிலே ஏந்தலே, இடையனே எனத்தேடும்! 270

தேடும் முக்தியும், நாடும் சொர்க்கமும்,
பாடும் பாட்டும், ஆடும் ஆட்டமும்,
அனைத்துமவனை அறிந்ததாலே, அவனுள் மூழ்கும் -
அதனால்,
இணைத்தேன் இடையனோடு என்னையும் இந்நாளில்! 271

இந்நாளில் என்னுள்ளம் களிகூறும்,
மண்ணாளும் மன்னன் போல் மனந்துள்ளும்,
என்னாளும் இறைவனடிசேர, இதயம் பட,படக்கும் -
கண்ணனைக்
கொண்டாடும் உள்ளம் கண்ணனால் கடைத்தேறும்! 272

தேறும் மனம் தெய்வமுன்னில் மூழ்கும்,
நாறும் மலர்களும், நாளும், கோளும்,
பாடும் பரந்தாமனுக்கே என நினைக்குமுள்ளம்,
ஓடுமா தறிகெட்டு உலகினிலே! 273

உலகினிலே உன் வீடடைவதே உத்தமம் ! - கலைகளில்
கண்ணன் கண்வீச்சே கற்பகவிருட்சம் !
அலைமகள் அருகினிலே அமர்ந்த பெருமாளே -உன்
அழகினிலே அடியேன் பித்தனாகிச்சிறப்பதே பெரும்புண்ணியம்!
274

புண்ணியமுன்னை நினைத்தாலே. புகழுமுன்னை
எண்ணினாலே,
பண்ணியதும், பண்ணுவதும், எண்ணுவதும், எண்ணாததும்,
வெண்ணீரில் வீழ்ந்தவெல்லாமாகும் உந்தன் முன்னால் -என்
கண்ணியநாதன் காமாட்சிச் சோதரனே! 275

சோதரனே இல்லாமல் தனிப்பிறந்தேன் ! - மானுடரின்
சதிகார உலகிலே சத்தியம் வைத்து வியாபாரம்
பண்ணினேன்!
அதிகார மமதையும் , ஆசையின் பிள்ளைப்பணமும்,
சத்தியத்தைச் சவமாக்கிப் போட்டதே நாராயணா ! 276

நாராயணா ! நமன் வாழ்க்கை நான் வாழவேண்டுமா?
கண்ணீரோடு போராடிக் கைலாசம். வைகுந்தம்வாசல்
மறக்கனுமா?
கண்முன்னே கண்ணனைக் களவு கொடுக்கவேண்டுமா?
பெண்தன்னில் மூழ்கிப், பெருமாளையும் பெருநோயாக்க
வேண்டுமா? 277

வேண்டுமா நான் படும் இன்னல் மாலைகள் ?
தோன்றுமா கண்ணீரோடு உண்மை பக்தியுமே ?
போதுமே வறட்சியும், என் பசையில்லா வாழ்க்கையுமே,
நேரமே வந்துவிடு, நிம்மதியில் நிமலனைக் காட்டிவிடு !
278

காட்டிவிடு கார்குழல் தாயின் கணவனை,
கண்ணனென் பக்கமிருந்தால், பாழ்துக்கம் வருமா ?
எப்பிறவி என்ன செய்தேன ? இப்பிறவி
பணப்பாம்பு பிடுங்குதற்சோ உடலெடுத்தேன் ! 279

உடலெடுத்தேன் சதையோடு சதிராடும் ஆசையுடன்,
கடலெடுத்துக்கண்ணீராய் அணிந்துவிட்டேன்,
துன்பப் படகெடுத்து, துயர்துடுப்பு தள்ளுகின்றேன்.
மரணப் புயலதுவும் மகிழ்ந்து தான் வந்ததுவே ! 280

வந்ததுவே வடிவேலன் மாமன் கருணையே ,
தந்ததுவே பொன், பொருள், புகழ்யாவும்,
அழிகின்ற உலகிலே, அழிகின்ற பொருளிவற்றை,
அழகாக ஒதுக்கியே, அடியேனும் அரங்கனை நாடினேன்!
281

நாடினேன் நாராயணன் ஒளிச்சுடரை,
நல்லதொரு வழியுடனே இருள் ஓட,
நல்லான காதலுமே கருக்கொண்டதென்
மேலே.விண்ணமுதம் கண்டதால் வீடுநான் பெற்றேனே!
282

பெற்றேனே பெருமாளின் பேரன்பை,
உற்றவன் ஆனதினால் உயிர்தந்தான் -அந்த
உயிருக்குள் உயிராக கலந்தே ஒளிதந்தான்,
பிறந்த பயன் யானடைய, பெருமாளே துணை நின்றான்!
283

நின்றான் திருமகள் துணைகொண்டே என்னில்லம்,
வறுமைப்பேய் வாயடித்து ஓடிப்போக -என்
வண்ணமணிக் கண்ணன் புன்னகைத்தான் - புவியிலென்
எண்ணமெல்லாம் வெற்றிபெற துணையே யானான்! 284

ஆனான் இடையர்தம் கைக்கோலாய் ஓர்நாள்,
மாடாடு மேய்ப்பவனாய் மனமகிழ்ந்து புவியில் நடித்தான்,
பரமாத்மா பாவிபோல பலதுன்பம் அனுபவித்தான்,
உலகத்தோர் உய்வதற்கே உருவொன்று தானெடுத்தான்!
285

உருவொன்று தானெடுத்தான், உத்தமனாய் உலகில்
நின்றான்,
கழற்காலால் உலகளந்தான், மனித கர்வத்தைப்போக்கி
வென்றான்!
இரவெடுத்து உடலில் பூசி, பகலெடுத்து மனத்தில் வைத்தான்!
இந்திரனை வென்றதேவன், எங்கள் மாமன்னன்! 286

மாமன்னன் தாள் பணிந்தால் மனம் தருவான் !
மனமதிலே தர்மம் கொண்டால் பணம் தருவான் !
தினமொரு பிறவி எடுப்பான், தெவிட்டாமல் ஆடிடுவான்,
கடைக்கண்ணால் கைலாயம், வைகுந்தம் காட்டியேச்
சிரித்திடுவான்! 287

சிரித்திடுவான், சித்தனாக்கி மகிழ்ந்திடுவான்,
பித்தன் போலே பிதற்றிமனம் வெம்பிடுவான்,
அத்தனையும் நடிப்பென்று அன்புதந்து பொங்கிடுவான்,
ஆயனை அறிந்துகொண்ட ஆடாக நாமிருப்போம்! 288

நாமிருப்போம் நாராயண மந்திரம உண்டே,
நல்லது செய்திருப்போம் தயாளன் கருணைகொண்டே,
வருவது வரட்டும், போவது போகட்டும் - இங்கு
நிற்பது எல்லாம் நிமலனருள் ஒன்றே ! 289

ஒன்றேயெனை யான் நினைப்பதும் உன்னைத்தான்,
நன்றேயெனக் கொள்வதும் நாரணன் தாளைத்தான்,
என்றோ வந்து, எனக்குள் புகுந்து -இன்பமாயம்
செய்து, செய்து சிறைவைக்கும் மாயை என்ன? 290

என்ன ஒரு இன்பம் உன் தாள் பணிந்தால்,
என்னவேண்டு மிவ்வுலகில் உன்முகம் கண்டால்,
பண்ணியதும், பண்ணுவதும் பரந்தாமன் உன் செயலே,
பாவமும், புண்ணியமும் பரமபிதா உன் வடிவே! 291

வடிவே பிறவித்துன்பம் நீக்கும் - உன்
முடிவே உலகத்து மாந்தருள் நிலைக்கும் - என்
கனிவே நீ வீடுவந்தால் என்றைக்கும் ,
துணிவே சொத்தாக்கித் துன்பமெல்லாம் ஓடிவிடும் ! 292

ஓடிவிடும் துன்பப்பேய்கள் உனை நினைக்க,
ஆடிவிடும் மனமே உன்னன்புதனைச் சுவைக்க.
பாடிவரும் நிலவும் பரந்தாமன் காலே, -எனை
நாடிவந்த விதிவெல்ல யானினி என் செய்வேன் ? 293

என் செய்வேன் ? எப்படி உய்வேன் ?
கண்ணும், கருத்தும் கருப்பழகை நாடுகையில்,
விண்ணும். மண்ணும் வேம்பெனவே மாறுகையில்,
என் செய்வேன் ? எப்படி உய்வேன் ? 294

உய்வேன் உன்னடியில் என்று நான் நம்புவதே ,
முன்செய்த புண்ணிய முடிவின் வாழ்வே,
எனைக் காக்க நீயிருக்கையில் - உள் , புறம் வேகும்,
மானுடர் யெனை மாய்ப்பரோ மாயவா ! 295

மாயவா ! கோவிந்தா ! கோபாலஞாயிறே!
யான் படும் இன்னல்கள், நமனாட்சி கோலங்கள்,
கண்ணனை நினைந்ததால் கண்ணீர் சொந்தமோ ?
கள்வனை நினைப்பவர்க்கு பிறர் கண்ணடி உறுத்துமோ?
296

உறுத்துமோ உளம் வெந்த புண்ணும்,
படுத்துமோ பரந்தாமச் சொந்தமும்,
எனையாத்து. தீபமேற்றும் நல்வேளை -
நாரணன் தரும் நல்ல பசுஞ்சோலை ! 297

பசுஞ்சோலை யொன்று பரவசம் மூட்டக்கண்டேன் !
பல்பயிர் பச்சைகள் செழித்தே இருக்கக்கண்டேன் !
ஆங்கொரு அத்திமரம், அதனடியே குழலோசை,
பாங்குடனே இராதையவள் பகவானை அணைக்கக்
கண்டேன்! 298

கண்டேன் காதலுடன் கலவியும் நடந்திடவே - இனி
வேண்டேன் விண்ணமுதம் வீடுதேடி வந்தாலும்,
கண்ணன் கலவி கண்டே, காதல் சுகம் பெற்றவரே,
மண்ணில் நிலைக்கத்தான் மனமே வைப்பாரோ? 299

மனமே வைப்பாரோ மாபாவியைத் தேற்றவே,
தினமே மனம்பூக்கும் மாயவன் காலடியே,
பிறவி தோறும் தொடரும் ; தொடர்ந்தே,
துன்ப நிழலறுக்கும் வேதநாயகன் அவனே ! 300

அவனே தென்றலெனப் புகுந்தான் ! - இங்கு
சதைவீட்டில் அன்புநீர் சுரந்தான் !
மனமானான் ; மணம் பண்ணும் மாயமானான் ! -தினம்
மாயத்தில் மண்ணிலவாய்ப் பூக்கும் பூவானான் ! 301

பூவானான்; பொன்னானான்; பொன்னின்
நிறமொத்தத்தேனானான்!
ஆயர்கொடிப்பெண்டிர் அன்புச் சுவையானான்! - என்றும்
பக்தர்க்கோ பரமபதம் தரும் பகவானானான்! -என்
நெஞ்சணையில் துயில்கின்ற கோவிந்தனானான்! 302

கோவிந்தன் ஆனான்! கோவர்த்தனகிரி தாங்கும்கோபாலன்
ஆனான்!
பாவிந்தர் பாடும் பாட்டானான்! மனக்கண்ணில்
பரதம் ஆடும் அரம்பையானான்!அன்பைப்பிழிந்தெடுக்கும்,
அநாதரட்சகன் நெஞ்சிலே, அன்புப்பிரவாகம் தந்தான்! 303

தந்தான் காப்பாற்றும் உறுதிதனை நெஞ்சத்திலே,
எனைவென்று, இறுமாப்புக்களைந்து, களைந்து, தனை தந்து
தன்னிகரற்ற தாயன்பால் யெனைத் தாலாட்டி,
தன்னலமில்லா வாழ்வுதந்தான் தரணிவாசன் ! 304

தரணிவாசன் நெஞ்சத்திலே நான்படவே புண்ணியந்தான்,
எப்பிறவி செய்தேன்? எவ்வழியில் உய்வேன்?
ஈன்றெடுத்தத் தாய்கூட பொருளால் அன்பு தந்தாள் - எனைத்
தத்தெடுத்தத் தலைவனோ, தன்னலமில்லா அன்பு செய்தான்!
305

அன்புசெய்தான் ; அரவணைத்தான் ; யான்
ஆங்கொரு துன்பம் கண்டபோது உவந்தே களைந்து,
பாங்குடனே யெனை ஆதரித்தான் ! பக்குவமாய்
சங்கு, சக்கரபாணி தன்னகத்தே யெனை வரித்தெடுத்தான்.
306

எடுத்தான் இப்பிறவிதனைக் காப்பதற்கே தன் மடியில்,
இளமயிலாள் அன்மைவிட்டே, எழுந்தோடிவந்து,
எந்தனுக்கே உதவி செய்தான்! இருகண்ணில்,
நீர்சுரக்க யான் செய்த தவமெனவே யெனை ஆதரித்தான்! 307

ஆதரித்தான் அன்புசெயா என்னையுமே பொரு பொருட்டாய்,
தன்னிலையில் தானிறங்கி, தவம் செயும் யோகியர் விட்டே,
பாவியென் னில்லம் ஏகினான் ! பரந்தாம சூத்திரத்தை -என்
ஆவியிலே கலக்க வைத்து ஆனந்தக் கூத்தாடினான்! 308

கூத்தாடினான்; கொண்டாடினான்; கொள்கையெல்லாம் விட்டே,
பாழ்நரன் எனக்கே பல்விதமாய் உதவி செய்தான்,
விதிவந்துறுத்திய போதும், மதியாய் அவன் வந்தான்!
கதியென்று நினைத்தேன்; கைவிடவில்லை நாராயணனே! 309

நாராயணனே, யான் வேண்டும் இக,பர,சுகம்யாவும் நீயே,
வேறென்ன வேண்டும் இப்புவிதனிலே,
மண்மீது ஒளிவீசும் மாணிக்கத்தை விட்டே,
மலைமீது துடிக்கும்விளக்கிற்கே யார் ஆசைகொள்வார்?
310

ஆசைகொள்வார் மேனியிலே அரும்புகின்றப் பூக்களெல்லாம்,
அன்னையவள் பொறைகொண்டே, நாரணனை,
பின்னுகின்ற மணத்துடனே பெருமை கொள்ளும் -எங்கள்
மின்னுகின்ற மேனியழகன் மேதகு கோவிந்தனே! 311

கோவிந்தனே குழந்தையென எனையெடுத்தான்!
கோடிசுகம் யான் பெறவே முத்தமீந்தான் !
ஆழிசூழ் கடலோன் அன்பினிலே மூழ்கி,மூழ்கி,
பாழுலக இன்பம் மறந்தே பக்குவமாய்க் கரையடைந்தேன்!
312

கரையடைந்தேன் கருணாகரன் கருணையினால்,
பயணம் போனகலம் மூழ்க, ஒருகைதந்தே,
பெருமாளும் யெனையெடுத்து இன்பக் கரைசேர்த்தான்! -என்
இன்னல் யாவும் களைந்தே, களிப்பு தந்தான் ! 313

தந்தான் பெருவாழ்வெனும் இல்லறமே ,
பேணியதைக் காக்கவே மனையொடு குழவிதந்து ,
மனத்தினிலே தர்மம் தந்தான் ! தர்மவழி
செல்வம் பெறவே தரணியிலே வழிவகுத்தான் ! 314

வகுத்தான் தர்மசாத்திரங்களை தன் நடைப்படியே,
உகுத்த நீர் உதவும் வல்லமை இரக்கம் வைத்தான்.
எங்கள் ஏழுமலைஞானச்சிரிப்பில் தர்மமே தவம்.
கண்களிருக்கப் புனைஓவியம் காண வேறு தேடுவரோ? 315

தேடுவரோ தேனிருக்க ஒருநாளும் கரும்பினையே,
பாடுவரோ பரந்தாமன் பாட்டிருக்க வேறொன்றை,
நாதன் தாள் நமபயம் நீக்க, நமனை நினைந்தே மாய்வரோ?
நாராயணன் அருளிருக்க, வேறொன்றிற்காய அலைவரோ! 316

அலைவரோ அலைமகள் திருமகள் அருகிருக்கப்
பொருளுக்காய்.
தொலைவரோ யென வீண் சபதம் கொண்டே
வாழ்பவரெல்லாம்.
சூரியன் கண்ட பனியென மாறுவர் பரந்தாமன் அருளினால்,
வீரியம் கொண்ட மனமே,வீணாசை விட்டுவிடு! 317

விடுதலும், தொடுதலும், பெறுதலும் தருதலும்,
படுதளம் பாம்பாய்க் கொண்டவன் பாதமே!
காரியம் யாவும் செயும், செய்விக்கும் -தினம்
பெறும் விதியென்பதும், மதியென்பதும் மாயவன்திறனே! 318

மாயவன் திறனே மனிதனிவனுள் புகுந்து மலர்ந்தது,
தூயவன் அருளே மலரின் தேனாய் மணந்தது!
ஒலிக்கின்ற சங்கும், சுழல்கின்ற கைத்திகிறியும் ,
குழப்பத்தைப்போக்கி குமுதத்தை மலர்விக்கும் ! 319

மலர்விக்கும் உன்னன்பே எனைக்காக்கும்,
எமபயம் வந்தபோதும் ஏந்தல் புலன் காக்கும் -பிறர்
கண்ணீரைப் பார்ப்பவர்க்கு கடவுள் தெரியாது,
மண்ணிலே மனதைப் படித்தவரே மாயவனை
உணர்ந்திடுவார்! 320

உணர்ந்திடுவார் உள்ளமெல்லாம் உருகி உனையடையும்,
மலர்ந்திடுவார் எவருள்ளும் மாயவன் நிறைந்திடுவான்,
அலைந்திடும் மனமெல்லாம் அவனை அறியாதது -தினம்
தொலைந்திடும் பொருள் மனது அவனில் நுழையாது! 321

நுழையாது துன்பக்கடலலையே வணங்கிடின் பரந்தாமன்
பாதம்,
வெறுத்திடும் வாழ்வெல்லாம் இனித்திடும் -தினம்
மறுத்திடும் எதுவும் கிடைத்திடும் -பணம்
தானே வந்திடும் , தயாளன் நினைவிருந்தால் ! 322

நினைவிருந்தால் அது உனதாக இருக்கும்,
மனமிருந்தால் அது உனையே நினைத்திருக்கும்,
தனம், பணம் எதுவானாலும் தயாநிதி உன்னருளே ,
நிணம், பிணம் எதுவானாலும் என் கோவிந்தனருளே! 323

அருளே யோர் அற்புதமாய் குவிந்திருக்கும்,
அனுதினமும் மனம் புகுந்தே சிரித்திருக்கும்,
பித்தரும், சித்தரும் பெருமாளின் உள் காண,
நித்தமும் இயற்றிடும் நீள்தவம் நிலைத்திருக்கும் ! 324

நிலைத்திருக்கும் கலைகளெல்லாம் பூத்திருக்கும்,
மலைத்திருக்கும் மாந்தருக்குள் மகிழ்ந்திருக்கும்,
விலையில்லாப் பொருளாகி பரவிப் படர்ந்திருக்கும்,
நிலையாத மனத்துள் நீங்காது நின்றிருக்கும் பெருமாளே! 325

பெருமாளே யுனை நினைத்தால், வேறு பிறவியுண்டா?
அருளாளா உன் பாதமிருக்க, சொரக்கமென்று உண்டா?
-மனித
தவறுபொறுத்து, தர்மம் காத்து சிறப்பவனே,
வயிறு வளர்க்கும்மனிதனிவன், மன்னித்தருளே! 326

அருளே யோர்வடிவாய், அழகே ஒளிக்குழம்பாய்,
அன்பு சுரக்கும் நன்னீர் ஓடையாய், - மனத்தின்கண்
வெம்மையும், தண்மையும் கலந்ததோர் அதிசயமாய்,
எம்மைக் கடைத்தேற்ற, இசைந்து நின்ற பெரும் வள்ளலே!
327

வள்ளலே உனக்கு ஒப்புவமை உலகிலுண்டா?
சாலப்பரிந்து அன்புசெயும் தொண்டனுக்கு,
காலமறிந்து, கையுறைதந்து, பிறந்தபயன் தன்னை,
பெரும் புண்ணியமாக்கி, பெருமைதரும் பெருமானே! 328

பெருமானே அருளாளா, ஏத்துவாரேற்றும் ஏந்தலே,
இன்பத்துள் தனியாகி , துன்பத்துள் துணையேயாகி,
பண்பது பயிலச்செய்த துயிலரசே - உன்
அன்பது எமைப்பித்தனாக்கிப் பிதற்றச் செய்ததே ! 329

செய்ததே மாதீவினைதான் ; நெஞ்சம் உள்ளுள்
பெய்ததெல்லாம் வஞ்சகக் கலைதான் -இங்கே
துஞ்சுவாரும் உளரோ, தூயவனே நீயிருக்க, - என்
அஞ்சுகமே, அரும்பொருளே, ஆராவமுதே வணங்கினேன்!
330

வணங்கினேன் முதற்செயலாய் முத்துக்கிருஷ்ணன்தாளை,
யான் சென்னி பெற்ற பெறும் பேறு இன்றடைந்தேன்,
ஐம்புலன் வென்ற அறிவரசே, உந்தன் நோயிலா
காலடிச்சரணம் ! கருணாகரா ! கருப்பரசே! 331

கருப்பரசே , என் கண்ணில் பூத்தப் புத்தொளியே !
ஒளிக்கிரண தாயே, உவமைக்குப்பொருந்தா - உவமையே!
களிகூர்ந்த கனியே, எமைக் கன்னம் வைத்தப் பெண்னே,
விளிக்கின்ற எதுவும், வீணாகா வீசுதென்றலே! 332

தென்றலே, தென்பொதிகைச் சந்தனமே,
மின்னனுவில் மீளா தண்ணொளிர்க் கதிரே,
தாமரைப்பூவே, பூவிலுறையும் திருவே ! -என்
ஞானக் குழம்பே ! நந்தா விளக்கே ! 333

விளக்கே, விடிவில்லா மண்ணிலவே !
பொன்வேய்ந்த கூரைகீழ் மின்னுமைமைப்பே!
எண்ணுகின்ற எண்ணமே! எழுதும் எழுத்தே !
சிந்தனை முத்தே ! தினம் மனம் துளிர்க்கின்ற தமிழே !
334

தமிழே, அதன் வடிவமெனும் இலக்கணமே !
மொழிப் பிறந்தக் கதைக்கு முன்னம் பிறந்த முதுமையே,
அணுக்கூட்டமே, அதனுள் முதன் பிறந்த,
அணுவெனும் அணுவே, அன்பின் உருவே ! 335

உருவே ! திருவே ! உயிரே ! நிலவே ! -மனம்
அருள்வாய் அழகாய் தினமே !
மழுவே ! மனமே ! தொழுவே ! கொடியே ! -தினம்
தருவாய் ஒருவாய் அமுதே ! 336

அமுதே ! தமிழே ! அருளே ! திருவே ! -மனம்
திருவில் உறைந்த மாலே !
குமுதே ! குமிழே ! குருவே ! தருவே ! -தினம்
தருவில் விளைந்தப்பழமே ! 337

பழமே யெனக்குள்ளே சுரக்கும் அன்புச்சாறே,
பக்குவமாய் செய்துண்ணும அமுதே,
என் கடன் போக்க வந்த இளவலே,
என்றுங் காணாக் கருப்பொருளே , திருவருளே ! 38

திருவருளே யுனக்குள்ளே ஓர் அன்புக்குளம்,
குளக்கண்ணேப் பூத்திருககும் அல்லியெனும் அருட்பூக்கள்,
மலமனம் கழித்தே, மாலேயுன் குளம் வந்தேன்,
ஆல நிறத்தோனே, அன்பு நீர் தந்துதவு ! 339

உதவுதல் உன் தொழில் தானே -யெனை
ஏனிப்படி உழலவைத்தாய்? -மண்ணவர்
நாடும் தன மென்னிலில்லையே , அதனால் தினமொரு
தொலலையே அவனியிலே, அருளே இறைவா! 340

இறைவா, இம்மையும், மறுமையும் நீயே தலைவா !
மறவாப் புகழே ! மதிநிறைதிருவே ! -என்
கரவா மனத்தில் களிக்கின்ற கருணையே !
பிறவா நிலைவேண்டி, பெருமாளே யுன் வீடுவந்தேன் !
341

வந்தேன் மண்மீது பலபாவம் செய்துய்ய,
தந்தேன் என் ஆவி , அழியும் பொருளுக்காய்,
உள்ளங்கை நெல்லியென உள்ளங்கவர் கள்வனிருக்க,
பள்ளந்தூர் மனமாசிப் [illegible] ரந்தாமன் விட்டேனே ! 342

விட்டேனே விரகமுடன் பெருமூச்சும்,
கெட்டேனே கெடுமதியார் பெண்டிரினால்
பட்டேனே சுகமென்று, பல்நோயும் உடபுசவே,
விறரேனே பாழ் மனதைப் பரந்தாமன மனம் 343

நோக,நோக மானுடரை வசைபாடி,
போகமெல்லாம் பெருஞ்சொத்தாய்க் கொண்டாடி.
மயிர் முளைத்தும், மொட்டைபோல் மனங்கருகி,
உயிர் தந்த வள்ளலை உணராமல் மறந்தேனே ! 344

மறந்தேனே மாயவன் கருணையதை,
மருந்திருக்க நோய் போக்கத் தீயிட்டேன்,
மனம் திருந்த மனமில்லாமல் மாயத்தில் மூழ்கி வெந்தேன்,
தினம் ஒரு பாவஞ்செய்தே சேற்றுக்குள் காலை விட்டேன்!
345

விட்டேன் பொய், களவு, சூதத்தனையும்,
ஆனாலும் விட்டேனா பெண் சுகத்தை,
வைகுந்த வூர் செல்வதை மறந்தேன் -இன்று
மயானத்தில் தனியனாய் நின்றேன் ! 346

நின்றேன் பொருமையுடன் தூயவன் நினைவுடனே,
வென்றேன் துன்பமெனும் பெரும் அரககனையே,
பசிப், பிணி, கடனெனும் இராட்சசர் வதையினையே, - யாரும்
வெல்லமுடியாமல் உன் வீடுவந்தேன் சர்வேசா! 347

சர்வேசா நீயே பூமித்தாய் ! -நெஞ்சில்
பூர்வவொளிப் பொங்கும் கீற்றும் நீயே,
முடிவுக்குள் அரணாய், முதன்மைக்குள் அண்மையாய்,
இருளும், ஒளியும் இணைந்தேக் காணப்படும் ஏந்தலே!
348

ஏந்தலே யுன்னால் சுழலும் உலகம்,
உலகம் என்பதும் உன் செயலின் வாசம்,
கனவும்,நினைவும் சேர்ந்த பின்னலே உன்கீதம்.
கதையும், பாட்டும், ஆடும் நிருத்யமும் உனமுதம் 349

அமுதம் சுரக்கும் உன் கைக்குழலே, - அதை
தினமும் சுவைக்கும் மனக்குயிலே !
தண்ணெனும் நீரும் உன் தனிப்புனலே !
பண்ணெனப் பாடும் பாட்டும் உன் இராகமே ! 350

இராகமே யென்றும் இராகவன் புகழ்பாடுமே ,
கீதமே வேதகமலங்கள் தேடும் நயனமே,
பாதமே முக்திகாட்டும் தவயோகமே,
நேசமே நெஞ்சில் நினைவூட்டும் தாளமே ! 351

தாளமே, தார்மீகத் தாம்பாளமே ! - நல்ல
மேளமே , எங்கள் ஞானவேதமே !
கண்ணன் புகழ் பாடுதற்கே பிறவியெடுத்தேன் !
வண்ணவொளி நாயகன் பாதம் பற்றவே தவமும் செய்தேன்!
352

செய்தேன் பாவமெனும் பல வஞ்சனைகள்,
வஞ்சனையுள் துன்பம் தோய்த்துப் பிறர்க்களித்து,
எக்காளமிட்டே, இருகைதட்டி ஆர்ப்பரித்தேன்!
அத்தனையும் பொறுத்தே யெனை ஆண்டவன்
கைக்கொண்டான்! 353

கொண்டான் திருமகள் தன்னை மார்பினிலே ,
நின்றான் அன்புசெயும் பக்தர் மனத்தினிலே,
சுழன்றான் தர்மத்தாய் மடியினிலே,
வென்றான் வேத நாத, பஞ்சபூதங்களை ! 354

பூதங்களை தனக்குள் கொண்டே வாழ்ந்தான் !
வேதங்களைத் தன்னுயிரில் தரித்தே நின்றான் !
ஏழுலகில் எப்பிறவி எடுத்தாலும் தர்மம் கண்டே,
அவ்வவ்வுயிர் உய்யவே ஒளியாய் வந்தான்! 355

வந்தான் , போனான் , என்றிராமல்,
சென்றான்,நின்றான் என்றுகூறாமல்,
எங்கேயும், எப்போதும். எவ்வுயிர்க்கும்,
பிறப்பொக்கும் தர்மம் தந்தே வாழ்ந்தான் ! 356

வாழ்ந்தான் மாசில்லா மனந்தன்னிலே,
ஒருநாளும் சோர்விலார் செயலிலே விளங்கி,
பலனாகி உளம் நிரப்பும் பெருமாளே ! - நீ
கடனாகி வந்தவனைக் காப்பாற்றாயோ ? 357

காப்பாற்றாயோக் கண்ணனே என் வாழ்வைத்தான் ,
ஆர்ப்பரிக்கும் மனமும், ஆசைகொள்ளும் தினமும்,
ஏற்புடைத்து எம்பெருமான் பாதமல்லவா?
என்றும் நிலையான பொருள் நீயேயல்லவா? 358

நீயேயல்லவா ஊனும், உயிரும்,
அமுதம் தந்த வள்ளலே , அடியேனை ஆட்கொள்ள,
ஏனிந்த காலம் கடத்தலோ, கண்ணப்பா ! -என்
காலமெல்லாம் கனிந்தக் கனியே, மணிமுத்தே! 359

மணிமுத்தே, மரகதக் கடலின் நற்சொததே !
உம்பர் மேல் பூத்த உலக ஒளிவிளக்கே !
கணங்களெல்லாம் ஏத்துத் துதிக்கும் ஏந்தலே !
விநாடிகளின் விடியலே ! வீசுதென்றலே ! 360
(உம்பர் எனில் ஆகாயம் என்று பொருள் கொள்க)

தென்றலே, மனக்காயம் மீது படரும் கன்னலே !
தமிழே !அமுதே ! தருக்கள் வளரும் நன்னிலமே !
குழலியே ! குழலிதரும் குமிழ் மழலையே !
இரா முடிக்கின்ற பெருவிளக்கே , என் தெய்வமே! 361

தெய்வமே நீ புவியில் சுழன்றும் துன்பமேன் ?
பிறர் எம்மைக் கேலி பேசவா இப்பிறவி ?
பொன் , பொருளால் மனம் அளக்கும் மண்ணில்,
என் சொந்தமதுயிலாமல் உன் பக்தன் நிலை தாழலாமோ?
362

தாழலாமோ நிலை ? இனியான் தரணி வாழலாமோ ?
கடன்பட்ட நெஞ்சமும் களிகொள்ளுமோ ?
கண்ணன் என்ற பெயர் கொண்ட மன்னா -எனைக்
கண்கொண்டு பாராததும் என்ன ? 363

என்னவோ வாழ்கிறேன் ? எப்படியோ உழல்கின்றேன் ?
வறுமையேத் துணையாய் வாழ்க்கைப் பயணம்,
நாளெல்லாம் நம்பிக்கை மருந்தே நமன் வாசல் மறக்கும்,
ஏனிந்த வாழ்வு தான்? இறைவாக் கொன்றுவிடு! 364

கொன்றுவிடும் இளமனது முன்னால்,
நன்றுசெய்தும், நின்றுறுத்தும் பாவம்,
பாதிவாழ்வு நோயும், மீதிநாள் வறுமையும்-என்
ஜாதியென்றால் தலைவா,நீயேன் என்னுள் வந்தாய்? 365

வந்தாய், அம்பெனவே பாய்ந்து நெஞ்சில் - குளிர்
அம்புலியாய் நின்று, என் மனம் வென்றாய் !
பணம் தர மனமில்லாமல் பல துன்பம் தந்தாய் !
தினம் ஒரு துயரத்தை தோழனாக்கி மகிழ்ந்தாயே! 366

மகிழ்ந்தாயே, மண்ணுயிர்க்கெல்லாம் மனவன்பு தந்து
யானிறைஞ்சுவதும் ஒப்பில்லாவுன் அன்பைத்தானே !
தாய்விட்டு நீங்கி தாலட்டு மறந்து - இன்று
குழவி நிலை விட்டபோதே குணத்திலுன்னைக் கண்டேனே!
367

கண்டேனேக் கண்ணன் காலடியை - அவனொடு
கருத்தொருமித்தேனே, மணிவண்ணன் குழலொளியால்
என்னைத்தந்து, அவன் நன்மையில் வாழ்ந்து,
அனைத்தும் ஹரியே எனக்கொண்டேனே! 368

கொண்டேனே கோலமகன் அருளினையே கொள்கையென,
கண்வழிபுகுந்து, இதயத்தில் நிறைந்தவனை
உயிரில்கலந்து, உவந்து, உவந்து, உயிர்த்தேனே, - என்
ஒளிநிறைந்த வள்ளலை வணங்கினேனே! 369

வணங்கினேனே வானளந்த பொற்பாதம் தன்னை,
மாயவனாய் வந்து, மனந்தன்னை விரித்து,
பாயும் கருணையென பாசுரம் பல தந்து ,
யானேழுதக் கருப்பொருளாய் நின்றவனே! 370

நின்றவனே நினைவில் சுழன்றான் ! - நெஞ்சில்
சுழன்றவனே அன்பினால் நிறைந்தான் !
நிறைந்தவனே நெக்குருக உணர்வில் கலந்தான் !
கலந்தவனே காலமெல்லாம் எனை யணைத்தான்! 371

அணைத்தான் ஒருகையில் என்னுடலை,
பிணைத்தான் பிரிதொரு கையினால் தாயன்பினை,
மணந்தான் தன்செயலால் மனங்குழைய
தினந்தான் சுகம் தந்தான் தன்னினைவினாலே! 372

நினைவினாலே நின்று , நின்று - நெஞ்சில்
கனன்ற தீப்பொறியாய் உள்ளில் பரவி,
உணர்வில் குழைந்து , உயிரில் விழித்து,
உணர்ந்தோ றுலகம் ஏத்தவே மனத்தில் வாழ்ந்தான்! 373

வாழ்ந்தான் மனமெல்லாம் அரவப்படுக்கையோன் - அவனால்
வீழ்ந்தான் என ஒருபூதர் நாணிலத்திலுண்டோ ?
நாராயணனை நினைந்தார் நல்ல சுகம் பெற்றார் ,
என்ற நிலை என்றேனும் மாறுமோ , நாராயணா ! 374

நாராயணா யானுனது கடனல்லவா?
இவ்வுலகப் பொய்க்கடன்கள் யெனையென்செய்யும்?
புண்ணியத்தைப்போட்டேப், புவிமீது உழலுகின்றேன்,
எண்ணிய கருமம் முடிக்க, இறைவா நீ ஆணையிடு! 375

ஆணையிடும் அரவிந்தன் அடிச்சுவட்டில்,
வீணையென என்தாகம் சுற்றிவரும்,
வீணாகிப் போவோரே வேதநாதனைத்
தானாக தெரிந்து கொள்ளுங்கள் தர்மம் வாழும் ! 376

வாழும் உயிர்க்கெல்லாம் ஒருதலைவன்,
தலைவன் வழிநடப்போரே நற்தொண்டன்,
மண்ணிடையேப் பூத்த ஒளிச்சூரியனே !
கண்ணிரண்டில் கலந்தவனே யென் தலைவன் ! 377

தலைவன் , நல்லோர்க்கு வலவன் -எங்கள்
வலைமீன்கள் சேர்க்கும் மீனவன்.
கலையோடுக் கலந்தக் கமலக்கண்ணன்,
நிலைதடுமாறும் மாந்தர்க்கு நிலையான இறைவன்! 378

இறைவன் என்பவன் நல்லமனங்களின் கருவி,
கருவியின் ஆவி மனிதநெஞ்சங்களின் புரவி,
வருவினை வல்வினை, தீர்க்கும் பெருமாள்,
தருவதும், பெறுவதும் அன்பே , இந்நாள் ! 379

இந்நாள் என்நாதனே யுன்னால் ஒரு பொன்னாள் !
துன்பங்கள் தீர்ந்து, இன்பங்கள் துளிர்த்த நாள் !
ஐயெட்டு வயது வரையுதிர்த்தக் கண்ணீரெல்லாம்,
ஐயனுன் னால் மறைந்து, ஒளி தந்த நாள் ! .. 380

நாள் , கோள் என்செயும் என்னை, என் நாதனிருக்க,
பாலுள்ளிருக்கும் பசுநெய்யாய்ப் பரந்தாமன் ,
எனக்குள்ளும் நெய்யானான், .இனிதே மணந்தான் ,
ஏழையென்னை ஏணிமேல் ஏற்றிவைத்தத் தலைவனாவான்!
381

தலைவனாவான் , ஒருவன் எனைத் தழுவி நிதமும்,
தர்மம் பல சொன்னான் ; தார்மீக வழிகாட்டினான்!
எச்சிலொழுகும் சிறு பிள்ளையாய்க் குழலுடன் ,
பச்சைப் பாளைச்சிரிப்புடன் பரவசமாய்ப் பவனி வந்தான்!
382

**வந்தானொரு சேதிசொல்ல வண்ண வடிவெடுத்தே,**
**பொன்னுக்காய் அலைகிறாயே, புவிமனிதா,**
**பொன்னிலும் , பொன்னாய்க் கண்ணருகே மின்னுவதை,**
**கவனிக்கயேன் மறந்தாயென்றே கைகொட்டிச் சிரித்தான்!**
**383**

**சிரித்தான் சிறுபிள்ளையென, நெஞ்சில்**
பஞ்சுக்காலால் பொதிந்தான்,பொன்கையால்
தொட்டுக் கொடுத்தான் ; தோகைமயிலாய் மாறி,
சொப்பனவுலகம் காட்டியே சொக்கவைத்தான் ! 384

வைத்தான் பெண்டு, பிள்ளைப் , பாசமென பல மாயை,
தைத்தான் பணத்தினையே தினம் குத்தும் முள்ளாய்,
தனம் தேடித்தேடி முடிவில்லா நரகம் வீழவே,
நரர் எல்லாம் மோசம் போவதை நாராயணன் சொன்னான்!
385

சொன்னான் சொக்கத்தங்கம் பலநீதி,
சொந்தமாக்கினான் பரமனெனும் பல்நிதி,
கண்டவுடன் கேட்கும் கருணை மந்திரத்தை,
காசினியில் படைத்தே தனை வெளிக்காட்டினான்! 386

காட்டினான் கவினுறுசொர்க்கம் யாவும்,
ஊட்டினான் உலகயின்பம் யாவும் தெகிட்டவே,
கண்ணன் காலடியமைதி எங்குமில்லை,
கருணைக்கு வடிவமவனே, புதிதுமில்லை ! 387

புதிதுமில்லை நாராயணன் யெனைக் காப்பதும்,
அரிதுமில்லை அவனன்பை யான் வேண்டுவதும்,
எங்கும் பரந்து , எதிலும் விரிந்து நிறைந்திருக்கும் -
பெருமாளே,
உன் அருளாளன் யானே ஐயனே ! 388

ஐயனே, நீயே யெனக்குள் நினைவானாய் !
நினைவின் பொருள் , கருத்தாய் செறிந்து நின்றாய் !
அதற்காய் காலம் செலவு செய்யத் துணையானாய் !
அதையணிவதற்கு மறுத்து ஏனோ மறைவானாய்? 389

மறைவானாய்! மறையானாய்; மாயைக்குள் ஒலிந்தாய்,
இறையானாய்; இரையானாய்; இதயத்துள் வாழ்ந்தாய்,
எங்கும் , எல்லாமும் நீக்கமற நிறைந்திருக்கும்,
எனையாளும் ஈசன் மைத்துனா, நீயே சரணம்! 390

சரணம் பாடியே உன் சபை வந்தேன் !
குழலெடுத்து ஊதியே எனை மயக்கினாய் !
கோபியர் கொஞ்சும் இரமணா ! உன்னால்
ஏழையென் வாழ்வும் புகழேணியில் ஏறும் ! 391

ஏறும், மாறும் என் வாழ்க்கை யுன்னால் ,
எத்துன்பம் வாய்த்தபோதும் உன்னருளே ,
அத்துன்பம் மாய்த்தே இன்பம் தந்தருளும் ,
கண்ணாயென் வாழ்வென்றும் உன்னோடுதான் ! 392

உன்னோடுதான் உறவாடினேன் ! உறவாடியே
உளம் நிறைந்து மகிழ்ந்தாடினேன் ! மகிழ்ந்தாடியே,
மனதிலுறைப் பாவங்கள் கழித்தேன் -நாராயணா
மமதைய ரக்கனைக் கொன்றே மகிழ்வுடன் என்னோடு வா!
393

வாஞ்சையுடன் கல்லும் மலரும், வண்ணநாயகனின் -காலால்
கூடாவொழுக்கம் காட்டும் குற்ற வாழ்வு தன்னை ,
மாடாய்த் திரிந்த மனிதரெல்லாம் மனம் வைத்தே,
மாயவன் வீடுவர , மயக்கம் தெளியாதோ? 394

தெளியாதோ ஆசைப் பித்தமுமே , -எம்மை
நித்தம் பிடித்தாட்டும் அதன் திறனை,
என்னவென்று சொல்வேன் ? எப்படி வெல்வேன் ?
கண்ணா நீயேக் கனிந்து வழி காட்டவேண்டும் ! 395

வேண்டும் கர்வமற்றத் தூய உள்ளம்,
வேண்டும்பொறுமை யெனும் பெரியகுணம்,
வேண்டும் அன்போடு சேர்ந்த நல்லிரக்கம் ,
வேண்டும் தூயசிந்தனையும் , செல்வத்தோடு வெற்றியும்!
396

வெற்றியும் , ஆயுளும் நீண்டுவிட்டால்,
வேதநாயகன் பாதம் சிந்திப்பதும் நீளுமே,
கருணைவாருதியின் கால்களைத்தொட்டு மணக்கவே,
இவ்விருகைகளும் வந்ததென்றால் பாக்கியமே! 397

பாக்கியமே செய்ததினால் உனை நினைத்தேன்,
உனைநினைத்தே முன்வினைகள் யான் கழித்தேன்,
நாராயணன் கால்பட்ட என் சென்னியே,- வாழ்வில்
பாராயணம் பண்ணுவதும், அவன் நாமமே அனுதினமே!
398

அனுதினமே அவாமையில் சிந்தனை உதிர்த்தாய்,
அச்சிந்தனையைக் காவியமாய் ஆக்கிடவே,
[illegible]ணையைந்தே,
புகழ், பொருள் அ[illegible]தாய்! [illegible]
புரவலனாய் ஆ[illegible] [illegible] [illegible]ட்டாய்! 399

விட்டாய் எனைச் செல்வ ஆற்றினுள் மூழ்கியே,
மூழ்கி,மூழ்கித் திளைத்தெழுந்தும் தெளிவிடவில்லை,
பாழாசை மனத்தின் கண் புகுந்தே உறுத்த,
பரமன் மைத்துனா நீயெனை மீட்டுவிட்டாய்! 400

விட்டாய் பாழுலகில் பொருள் பற்றி வாழவே,
கெட்டேன் அதனால் பேராசை கொண்டே,
பற்றிக்கொண்ட பாதம் மாறுமோ கருணையற்றே, - இன்று
தொற்றிக் கொண்ட உள்ளமே உன சொந்தம் தானே!
401

தானே வரும் துன்பம் நம் ஆசையின் குழவி,
அவனே அனுப்பும் துன்பம் நமை அளக்கும் கருவி,
நாதனின் சோதனை நமனை விரட்டவே, - என
நாராயணன் அன்பையுணரவே நல்லதுன்பம்! 402

துன்பம் வருவதெல்லாம் என் வினையாலே,
இன்பம் என்ற எல்லாம் நாரணன் செயலாலே,
இம்மை, மறுமை என்பதும் பெருமாளின் பாதமே!
எம்மைக் காத்தருளும் திருமகள் மணமகனே! 403

மகனே உன்னில் என்னை விதைத்தேன் என்றாய்,
கண்ணில் இறங்கி இதயம் குடிபுகுந்தாய்,
காதல் கசிந்துக், கசிந்துக் கண்ணீரப் பெருகவே,
எனக்குள் புகுந்து எனையாளும் பெருமாளரசே! 404

பெருமாளரசே ஏனிப்படி துன்பம் தருகிறாய்!
பாவியாய்ப் போனாலும் உனை நினைந்ததால்,
புண்ணியனாய் மாறியும் ஏனிந்தச் சோதனையோ,
எண்ணியதை எண்ணியபடி செய்ய இறங்கியே நீ வா!
405

வாடிவிட்ட மலரென்னைச் சூடிக்கொண்ட ஐய்யனே!
வாணாளில் உன் பெருமை யானுணர்ந்தும்,
கேடுகெட்ட மனிதரால் * கேடழிந்துப் போவதா?
பாடுபட்ட பலனெல்லாம் பகவானே யுன் பிச்சைதான்!406
(* கேடு எனில் செல்வம எனப் பொருள் கொள்க)

உன் பிச்சைதான் எனையுலகில் உயர்த்தேற்றும் ,
உன் காலடிக்கிரணங்களே என் கலைகளாகப் பரிணமிக்கும்,
இதில் யான், எனது, என்ற மாயம் வெல்லுமோ? -என்
மாயவா , கோவிந்தா , மனம் வைத்தே புகழ்தா! 407

தா என்று சொன்னால் துன்பம் தருகிறாய்!
வா என்று சொன்னால் கண்ணீராய் வருகிறாய்!
என்னுளளம் கொன்றே , எனக்குள் ஒளிர்ந்தாய்!
அன்பில் மின்னும் அற்புத அறவொளியே அருகே வா! 408

அருகேவா; ஆறுதலைத்தா! -நெஞ்சில்
ஊறு வந்துறுத்திய போதும், உலக நாயகா,
நீயே கதியென நெஞ்சிலேற்றினேனே, -என்
பெருமாளே, கருணைக்கதவைத் திறவாயோ! 409

திறவாயோ உம்மனக்கதவை எந்தனுக்கே -நீ
திறந்தாலே என் திறன்யாவும் புகழாதோ,
கண்ணான என் கண்னே, கண்ணப்ப மருந்தே,
கைப்புண்ணுக்குக் கண்ணாடிவேண்டுமா, கருணைக் கடலே?
410

கடலே என்று நினைந்து உன்னில் குதித்தேன்
கருமுத்தாய்க் கிடைத்த இடையன் சிரித்தான்,
ஆனிமுத்தாய் ஆனவனே, அண்ணலே -உன்
பாதம் துணையாய் பலபணிசெய்யவே பவனி வந்தேன்! 411

வந்தேன் வண்ணவிழிநாதன் மனத்தில் வைத்தே,
தந்தேன் பொன் மனதைஎன் பெருமாளின் காலடியில்,
விண்ணையும், மண்ணையுமளந்தவன் என்னையுமளந்து,
விழியில் சிக்கியே, இதயம் ஜனித் தொளிர்ந்தானே! 412

ஒளிர்ந்தானே ஒன்றின் ஒன்றனாய் -தினம்
தெளிந்தாரை [illegible]ப்பெருகியே அன்பாய்,
வளர்ந்தான்: அனுதினமும் ஆதிமூலம் வழியில்
வளர்ந்தமனம் வென்றான், வென்றே வினையாகினான்! 413

வினையாகினான், விதியாகினான், அன்புதித்தார்க்கு
மதியாகினான், மாலாகினான், பேரன்புப் பெற்றார்க்கு,
சதிவெல்லும் சன்மார்க மாகினான் -என்றும்
நன்றாகினான் பாதம் நான் தழுவ ஏழுமலையாகினான்! 414

ஏழுமலையாகினான், எம்பெருமாட்டி அன்பாய் மாறினான்,
தோகைமயிலார் கோபியர் நன்கனவாகினான்,
பக்தர் போற்றும் பரமனடியாகினான் - என்றும்
எனையாளும் அருளுருவாய் நின்றே நிறைவாகினான்! 415

நிறைவாகினான் நெஞ்சே, என்னிறைவாம்!
மறைவாகினான் மனமே யான் தேடும் இறையாம்!
உறைவாகி, உயிரில் கலந்தே உறவாகி,
ஆதி, அந்தமில்லா அருட்சுடரே, அண்ணலே வணங்கினேன்!
416

வணங்கினேன் வண்ணனாம் என் கண்ணனை,
பிணங்கினான் இல்லை ஒருபோதும் என்னுடனே,
பிருந்தாவனந்தன்னிலே பெருமாளின் சிறப்புமே,
அருந்தா அன்பெல்லாம் அவன் பாதம் சுரக்குமே! 417

சுரக்குமே அன்பூற்றில் ஞானச்சாருமே,
பிறக்குமே ஐந்தறிவும் அண்ணல் பாதம் கண்டுமே,
இறப்பும், பிறப்பும் இல்லாதான் தாள் செல்வம்,
இன்றே யெனை வந்தது; இன்பமெல்லாம் தந்தது! 418

தந்தது எல்லாம், தரணிவாசன் கால் ஒன்றே,
வென்றதும், வெல்வதும் விமலன் தாளினாலே,
அல்லவை அறுத்து நல்லது தரும் நாராயணா,
உள்ளமெல்லாம் உன் பக்கம் உலகநாயகா! 419

நாயகா உள்ளில் எனை இருத்திக் கொண்டாய்!
உளம் தன்னில் அன்புசெயும் மந்திரம் சொன்னாய்!
செல்வமெல்லாம் நீயே என யென்னை உணரவைத்தாய்!
செல் புகழும் நிற்கவைக்கும் நிறைவைத்தந்தாய்! 420

தந்தாய் பற்றுடனேப் பலபாசம் செய்தே துன்புற,
வெந்தாய் மனந்தன்னில் என் செயல் கண்டு துன்புற,
புறம் நீங்கி அகம் கண்டேன் புண்ணியனுன்னால்,
அறம் செய்தே அருள் வெற்றியான் காண்பேன் புவியினிலே!
421

புவியினிலேப் பூவொன்றுப் பிறக்கக் கண்டேன்,
பூதலத்தில் புகழெல்லாம் அடையக்கண்டேன்,
மேதினியில் மேவுசெல்வம் நிறையக்கண்டேன்,
மாதவனின் மனம் முழுதும் மாயமெனக் கண்டேன்! 422

கண்டேன் கமலக் கண்ணன் வண்ணப்பாதம் ,
காணாத சுகம் யாவும் அதில் சுரக்கும், அதுவே வேதம்,
ஆதி, அந்தம் இல்லா அருள்வடிவில் -இன்று
ஜோதியொன்று ஒளிரக்கண்டேன்; உயிர்துடிப்பில் நின்றேன்!
423

நின்றேன் நிமலன் நிழலடியில், அதனால்
வென்றேன் பலபடி வாழ்வினிலே - எப்போதும்
இடரேது ஏந்தலை நினைத்திருக்கையில் -வாழ்வில்
சுடர் எல்லாம் சுதாமன் காலடியே! 424

சுதாமன் காலடியே என் சொர்க்கபூமி,
அவன் நினைப்பினாலே வெற்றியும் வீடுவரும்,
தேடிவரும் எதுவும் இன்பமாகி எனையடையும்,
எல்லாம் என் பரந்தாமன் செயலே, பராபரமே! 425

பராபரமே! பரமன் மைத்துனனே! பாவம் கழிக்கும்
பரந்தாமச் சூத்திரமே! அன்பின் அன்பே -என்
தாயினும் அன்பினன்; என் சேயினும் அன்பினன்,
எனக்காய் யான் செயும் அன்பிலும் உயர் அன்பினன் உத்தமனே!
426

உத்தமனே உன் வீடு கண்டுவிட்டால், -இந்த
உலக வெற்றிகளும் என் முன்னே குதித்தாடும்,
முடியாதவை முடிந்துவிடும்; முற்றில்லாதவை முற்றிவிடும்!
பிடியாதப் பெரும் புனல் நாயகா நீ வாழ்கவே! 427

வாழ்கவே, வளர்கவே தூயதமிழ் நெஞ்சினுள்ளே,
ஊழியின் ஆழியாய் உத்தமன் உருப்பெறவே,
பாவியான் செய்ததவம் பலித்தது இன்னாளே,- என்
ஆவியின், அன்பின், அயர்வில்லா அரங்கனே! 428

அரங்கனே, அம்மையின் கரம்பற்றும் அன்புச்சுரங்கமே,
எனக்குள்ளே வந்துதித்தாய்; இவ்வுலகம் பெரிதும் வியக்க,
இயக்கினாய்; இயக்கத்தின் வெற்றியெனச் சுமந்தாய்,
எல்லாமும் எனக்குள் புதைத்து அன்புச் சிறையிட்டாய்!
429

சிறையிட்டாய் சிற்றெறும்பு என்னையுமே,
மறைவேந்தன் மனதிலுறைந்தக் கதையை ,
இரையெனவே இறைபற்றும் முறையை,
இயம்பி , இயங்கி, எனக்குள் மலர்ந்தறிந்தேன் ! 430

அறிந்தே னோர் அற்புதப் புதையலை புவியினிலே,
தெரிந்தேன் செவ்வண்ணத்திருமகளின் திருமகனை,
பிறந்தேன் என் பாவத்தால், -உன்னை நினைந்தேயினி,
பிறவேன் எப்போதும் மாநிலத்தில், மாயவா! 431

மாயவா, கோவிந்தா, கோபாலா, மதுசூதனா!
வேணுகானா, விஷ்ணுதேவா, விமலநாதனே -என்
ஞானவேள்வி நாயகனே, நாராயனனே - உன்
பிச்சையென்னை உயர்த்தும், புவியில்புகழ்தந்தே வாழ்த்தும்!
432

வாழ்த்தும் வாழ்வும் ஒளிப்புனலே, உன்னால்,
களிமண் எடுத்துக் கலையுயிர் ஊட்டி, நெஞ்சில்
நீயே பரவி , நிற்கும் புகழ்தந்து -என்றும்
எனக்காய் இறங்கி வந்த செவ்வேள் மாமனே! 433

மாமனே என்றழைக்கும் உரிமை மருகனுக்கே,
சோமனே உனைத்துதிக்கும் இன்பம் பக்தருக்கே ,
வாமனன் , வரகுணன் , எங்கள் நாராயணன்,
பூமணங்கமழும், பூவார்த்த வள்ளல் பெருமானே! 434

பெருமானே உன்னை உணர்ந்தவர் யார்?
எதுவரினும் அது உன் செயலே, உத்தமா!
யான் , எனது என்ற மமதையழித்தேன் -மண்ணில்
வீண் வாழ்வு முடித்தே , விண்ணகம் வருவேன்! 435

வருவேன் வான்புகழ்பரப்பும் புண்ணிய மலருடனே,
வடிவேலன் மாமனைத் தொழுதே உள்ளம் மகிழ்ந்திருப்பேன்,
எல்லாம் நாரணன் செயல் என்பதை யுணர்ந்தே,
இமையுறுத்தும் துன்பம் துறந்தேன்! தூயவனை யடைந்தேன்!
436

அடைந்தேன் அகந்தையூர் ஓர்நாள், -அதனால்
"ஆனந்தம், ஆனந்தம்" என்றே பொய்ப் புகன்றேன்,
எனக்குள் அடைந்தவன் என்னில் விழித்தேப் புத்திப்
புகன்றான்!
புதுப்பிறவி கண்டேன்! புனிதனால் புண்ணியம் பெற்றேன்!
437

பெற்றேன் என் மனப்படியே பெரும் புதையல்,
விற்றேன் என் பாவங்களை நாரணன் உதவியால்,
கற்றேன் தர்மம்; கற்றே கவினுறு வித்தை நூற்றேன்!
பெற்றேன் பெருமான் அன்பு பெரிதாக இன்று! 438

இன்று நெருப்பொன்று நீராய் என்னில் மூழ்க,
வென்றிடும் புவி கண்டே பயந்தமனம் வெந்தே,
பற்றிடும் பரந்தாமன் பாதமே யாவும் பெற்றிடும்,
மாமருந்தென்றே, மனத்தில் கொண்டே, மாயை வென்றேன்!
439

வென்றேன் எதையும் என்னவன் அருளால்,
எமபயம் விட்டேன் ஏந்தலின் துணையால்,
இம்மாறுடத் துன்பம் என்னை என் செய்யும்?
இம்மை, மறுமைத் தாளை சரணடைந்த பின்னே! 440

பின்னே யோர் நாள் பெருமையோடு பேசித்திரிந்தேன்.
கண்ணே யென்று கணிகையரை நினைத்தேன்.
"பொன்னே, பொருளே" யென்று பெற்றதை அணைத்தேன்.
மண்ணே பாவங்கண்டு துஞ்ச, மனமாயையால் அதனை
நினைத்தேன்! 441

நினைத்தேன் நினைவின் நாயகன் வாசலை -யானை
பெற்றேன் பெரும் புதையலென மாதவனை,
பட்டஒளி படருமேயன்றிக் குறையுமோ? -என்
கெடுகாலம் போக்கி, கேடற்ற வாழ்வு தந்த பெருமானே!
442

பெருமானே யுனக்குள் உயிர்த்தேன் உயிரில்
உன்னன்பு ஒன்றேக் கலந்துஉலகில் வாழ்ந்தேன்!
பெற்றதும், பெறுவதும் பெருமாளின் பெருமையே,
விற்றது என்ன ? விலைபோனது என்ன? மணவாளா! 443

மணவாளா . மதிநுட்ப தயாளா -கோள்களின்
வினையாளா, கோடிகளின் பெருமாளே -என்
கனவும், நனவும் கண்ணன் காற்கழலே -என்றும்
பிழைப்புண்ணும் மாந்தரிலே பெரும் பேறு பெற்றவன் யானே!
444

யானே இப்புவியில் புண்ணியம் செய்தேன். உன்னை
நினைத்ததினால்,
வானே உருக்காத அன்புநீர் உன்பாதம் சுரந்ததினால்.
தானே வந்தெனை மருவி ஆவிக்குள் புகுந்த அன்பே,
தேனே யுனையான் பிரிவதுமென்பதுமேது எக்காலமுமே!
445

எக்காலமுமே துன்பநதி என்னை மூழ்கடித்தது.
பொரு ளோட்டையாலே வாழ்வுப் படகும் கவிழ்ந்தது!
அருள் மரம் மிதவையாலே, அடியேனைத் தூக்கிவிட்ட,
அண்ணலே! அற்புதமே! அழகின் இரதமே! யானுன் வசமே
446

உடன் வசமே யான் கண்டதினால் பெற்றேன் பெறும் பேறு,
நான், எனதென்பதை மறந்ததினால் பெற்றதோ ஞானச்சேறு,
எப்போதும் காத்து நிற்கும் எம்பெருமானே, பெருமாளே,
இடர் வந்துறுத்துதய்யா இப்புவியில், இப்போதேக் காப்பாற்று!
447

காப்பாற்றும் தொழில் உனதல்லவா நாராயணா?
காக்காமல், கவலையனுப்பி உறுத்துவதும் நியாயம் தானா?
என்பாவம் போக்கவே, புண்ணியப் பாதம் நாடினேன்!
என் ஞானம் நூற்கவே, நற்கதியால் வேதம் தேடினேன்! 448

தேடினேன் தென்றலவன் மென்பாதம் நெஞ்சிலேற்ற ,
வாடினேன் அல்ல வண்ணமுகத்தான் ஒளிபட்டதனால்,
உயிர வேலி நிலவாய், உடம்புக்குள் புகுந்த மாய மருந்தே!
பயிர் செய்த பக்தியெல்லாம் பலனற்றுத் தோற்குமோ?
449

தோற்குமோ, தோள்வலி மாயவன் சொந்தம் நாடியும்,
பாற்கடல் ஞாயிறின் துகில்மனை அரசனணைப்பில்,
நூலிடைத்திருவும் நெருங்கி நிற்கும் சுகத்தில்,
மாலிடை செய்த பக்தி மறந்து நீ இருந்தனையோ? 450

இருந்தனையோ எந்தனையே மறந்தும் பெரும் துயிலில்,
கந்தனைக் கடம்பனை அன்புசெய் மாலவ மனமே,
எந்தனைத்தேற்றாமல் ஏன் விட்டனையோ? -என்
ஏழ்பிறப்பும் தொடருமுயிரே பாசம் அறுத்தினையோ! 451

அறுத்தினையோ அன்பால் நெய்த பக்தி ஆடையினை,
வெறுத்தினையோ வெம்மணலில் துடிக்கும் புழுவினை,
தடுத்தாண்டப் பெருமாளே. என் தங்கமே,
படுத்துக் குவலயத்தைப் பாதம் வைத்தவனே, பகவானே!
452

பகவானே யுன் பாதகமலங்கள் என் வாழ்வு,
இகழும், புகழும் எல்லாமும் எம்பெருமான் உன்னருளே,
மகிழ்வூர் காட்டிய மாயவனை மறக்குமோ நெஞ்சும்,
மனதூர் வந்தவனை தொடர்ந்திடுமே எப்பிறவியிலும்
இவ்வுயிரும்! 453

இவ்வுயிரும் உனதே; எவ்வுயிரும் உன் மயமே
மேதினியும் உலகும் , மோகினியின் விதியும்.
எல்லாமும் பரந்தாமன் செயலே என்றும்
இல்லாமல் இன்பம் தந்த எம்பெருமானே பெருமாளே! 454

பெருமாளே, என் பெருமானே, மனுத்திருவருளே!
உருவான மனவனுவே, அனுவிற்குள் அனுவான
அன்பான திருமாலே.
திருப்பாதங்கள் காட்டுகின்ற பரம்பொருளே -என்றும்
மறுவாதம் செய்வார் மனத்தில நீ அரும பொருளே! 455

பொருளே யிழந்தாலும் பெருமாள் நீயில்லையோ.
யானுன்னருளே மறந்தாலும் என் தலைசுட்ட உன்
கையில்லையோ,
வீணாகக் கழியும் நாளெல்லாம் நாராயணா என்னாலே.
வாலுயர வளர்ந்து புகழ் பின் பெறுவதெல்லாம் உன்னாலே!
456

உன்னாலே சேராதோ புவித்திருவெல்லாம் என் வீட்டில்,
மின்னலே போன்றதுன் பார்வை ஒளி பாவக் குழி
தூர்த்துவிடும்!
கேட்காதவன் போல் துயில் கொண்டு சிரிப்பவனே - நீ
ஏற்காத இவ்வுயிரும் வாழ்வது சுமைதானே ! 457

தானே நீ வந்தாய்; தரணியிலே கலை தந்தாய்!
மானே, மயிலேயென எழுதாமல் மன்னவனுன்னை எழுத
வைத்தாய்!
வீணே போகும் மானிடத்தில் உன் ஒளி ஏற்றினாய்!
வானே முட்டும் புகழ்தந்து, புண்ணியத்தை வெளிப்படுத்தினாய்!
458

நாய், நரியென அலைந்தே திரிந்த மனம்,
பாய் சுகம் கண்டு, கண்டு பாழாகிய உடலம்,
நோய் புகும் குகையிலே, நேரத்தில் மாதவனே,
தாயென வந்து தாங்கிக் கொண்ட மன்னவனே! 459

மன்னவனே இன்றென்னுயிர்க் காத்தாய்,
மாதவனே இம்மண்ணதனைப் பொன்னாக்கினாய்,
ஏதோ நடத்தவே இவ்வேழையை வளர்க்கிறாய்
எம்பெருமானே, நாராயணா நீயே அறிவாய் எதனையும்! 460

எதனையும் தரும் வள்ளலே அன்பினுக்கே,
மதனையும் உருவாக்கிய மாதவப் பேரெழிலே,
இப்பதர் தனை புவியில் பலமாக்கியே அருள் தந்தாய் - என்
பரம் பொருளே, திருவருளே, உளவுறவே நீ வாழியவே! 461

வாழியவே நாரணன் நாமம் ஒரு பழுதின்றியும்,
ஊழியின் முதல்வன் உத்தமரை ஏற்றுவனே,
பாவிஎன் உடலம் நினைப்பதெல்லாம் -நெஞ்சப்
பரந்தாமன் காலடியில் நடந்து விடும்! 462

நடந்துவிடும் நாரணன் செயலால் எதுவும்,
கிடந்து துடிக்கும் ஆவியே , நீ அவனை அறி,
அகிலம் மடிந்தெழவும் அண்ணலே துணையாவான் -
நெஞ்சில்
புகலும் சொல்லெல்லாம் நாராயண நாமமே! 463

நாரயண நாமமே நமனை விரட்டும், - மன
நன்னிலம் பாயும் நீரெனவே அவனன்பு உயர்த்தும்,
எண்ணிய எண்ணம் ஈடேறும்; ஏந்தலின் காலடியே - யான்
பண்ணுவதைப் புகழ்பாதையில் திருப்பும்! 464

திருப்பும் , திரும்பும், தினந்தோறும் பக்தரை விரும்பும்,
கரும்பின் சுவையினும் இனிதான எம்பெருமான் உருவும்,
அரும்பும் மனமே, அருள்கின்றவன் தாள் பணி - உன்
குறும்பும் மறைந்தே குணம் தரும் அருள் மணி ! 465

அருள் மணியே! அருஞ்சுடரே! அற்புதமே! ஆன்ம
கதியே - உன்
பொற்பாதம் தரும் இக,பர, சுகம் யாவும்,
என்றும் எனக்குள் ஒளிரும் ஒளிப்பழமே,
கன்றுதேடும் தாயானக் கதிரொளியே கனகக் குழம்பே!
466

குழம்பே உன்னுள் ஊறிய கறிகாய் நரனே,
அம்பாய் படைத்தென்னை இலக்கை நிர்ணயித்தாய்,
இலக்கை வெல்ல நீயே வில் தந்துதவவேண்டும்,
இலங்கை வேந்தன் வென்ற இராமநாராயணா! 467

நாராயணா உன்னன்பே என் உயிர்,
பாராயணம் பண்ணும் யாவுமுன் வேதத்தயிர்,
காணாதக் கனவாய்க் கருத்தில் உதித்தவனே - என்றும்
தோனாத உருவாய் எனக்குள் பாய்ந்தவனே! 468

பாய்ந்தவனே , பைந்தமிழின் மூலவனே,
காய்ந்த மனத்தில் பெய்த அன்பு மழையே,
நித்திலத்தில் நீங்காதெந்தன் பரம்பொருளே,
பக்திப் பயிரினிலே விளைந்த பெரும் புதையலே! 469

புதையலே உனக்குள் இருப்பது என்னன்பே,
பூங்கவிதை தந்து, தந்து, யெமை ஆதரிக்கும் திருவருளே!
நாரணமலையில் நான் வடித்த நான் மறைச்சிலையே,
வேரென எனக்குள் விழுந்து துளிர்த்த அழகருளே! 470

அழகருளே, அன்பர்க்குகந்த திருவருளே!
படர்கொடியேப், பரந்தாம மந்திரமே!
எந்தனுள் என்று மூறும் அருட்பெருஞ்சோதியே
பந்தமில்லாப் பண்பரசே, பாவமன்னிப்பருளும் பரவசமே!
471

பரவசமே எனக்குள் ஓரணுவின் குணமானாய்,
குணம் குன்றாத் திருவிளக்காய் மாறி ஒளிர்ந்தாய்,
பரம் தேடும் ஞானியர்விட்டே, பாவியெனக்குள் புகுந்தாய்,
முகுந்தாவுனைக் கண்டுய்த்தவர் உளரோ, உலகினிலே!
472

உலகினிலே உன்மத்தக் குதிரையேறி -ஆசை
சாட்டை வீறி, அறிவற்றவூர் சேர்ந்தேன்!
அதுபோது பொறியொன்று பட்டே கண் மலர்ந்தேன்!
யான் காணாத சுகமாய் கண்ணன் வந்தான்! 473

வந்தான் வார்குழலி மணவாளன் ஓர் நாள், - மனத்தினிலே,
தந்தான் தன்மனம் எனையாளும் எண்ணத்திலே,
பந்தமெல்லாம் பரமனன்பாய்ப் பாய்ந்து சுகமெனவே,
சொந்தமானான் சொக்கநாதன் மைத்துனனே! 474

சொக்கநாதன் மைத்துனனே, சொக்கத்தங்கமே,
சொர்க்கபதத்தின் சொந்தமே, சுகஇராகமே,
விற்கவோ அன்பின்றி வேறில்லை என்னிடமே,
கற்கவோக் கண்ணன் காதலையே மண்ணிடமே! 475

மண்ணிடமே மாநாயகன் மலரெனவேப் பூத்தான்!
விண்ணமுதம் தன்னிலூறியதாய், என்னிலுறைந்தான்,
இதயக்குளத்தே இன்பமெனப் பூத்தே வாசம் வீசினான்,
எம்பெருமான் நாராயணன் என்னுயிரே ஆயினன்! 476

என்னுயிரே ஆயினன் , இன்பப்பெருநிலவாய் ஆகினன்,
இருள் நீக்கும் ஒளிச்சுடரே, இன்னல் நீக்கும் இளமுகிலே,
என்னைக் கண்கொண்டு பாராயோ? ஏழையின் வாசலை,
நாடியே வந்து நாரணயின்பம் தாராயோ? 477

தாராயோ தரணிபுகழ் , செல்வமத்தனையும்
தந்தே தர்மவாழ்வு யான் செய்து உன்னடிபுகழவே,
ஓர்நூலேணி உன்னன் பால் போடாயோ?
கார்குழல் கண்ணா , கருமருந்தே, கண்ணின் கற்பகமே!
478

கற்பகமே , காதல் மணிச்சுடரே, அற்புதமே,
நற்பதமே, சாதலற்ற சரவொளியே , சங்கீதமே,
நிற்பதும், நிறைவதும், விற்பதும், பெறுவதும்
நற்குண நாயகன் அன்பென்ற ஒன்றினையே! 479

ஒன்றினையே நினைத்தேன், ஒருமைக்குள் திறமை கண்டேன்,
நன்றுசெய்தகாலை நாணிலத்தில்நாரணனை அடைந்தேன்,
வென்றுபுகழ் அடைந்தாலும், வேதநாயகனே -என்
குன்று போல் வாழ்வில் குமிழ்விளக்கு நீயன்றோ? 480

நீயன்றோ உலகின் பெரியவன, -என்
தாயன்றோ திருவில் பெரியவள் -உலகில்
பேயென்றேப் பிடித்தாட்டும் பணமாம் பெரியவள் -அந்த
நோய்க் கொன்றே பிடித்தாட்கொள்ளும் நாரணன பெரியவன்!
481

பெரியவன் அருளன்றோ பெருமை தரும,
சிறியவன் எனைப்போன்ற சிறுமுட்களும்,
அரியகுழலாகும், அற்புதன் திருவருளால,
உரியவன். உணர்பிப்பவன் என் ஐய்யனே! 482

என ஐய்யனே, ஏனோ இன்னும் மௌனம்?
நானுன் பைய்யனே . உறக்கமே ஏனோ இன்னும்?
பாம்பினிலே படுத்துத் தூங்கத்தான இது நேரமோ?
பசுமயில் பார்தேவியின் சுகததிற்கே இதுகாலமோ? 483

இதுகாலமோ, நீ சும்மாயிருந்து யான் துடிபபதுவும் ,
இது போறுமோ, யான் செத்துச், செத்துப் பிழைப்பதுவும் ,
உலகத்தார் சொல்வது போல் நான் ஏழையோ ?
உலகத்தார் தந்தஉன்னை நினைததினால வந்தவேதனையா?
484

வேதனையா இவ்வாழ்க்கை , சொல் கண்ணா!
சோதனை நீ செய்வதெல்லாம் நான விளங்கேன!
போதனை எதுவும் உனையன்றி யார சொல்வார்
எந்தனுக்கே-என்
சாதனையாவும் ஜனார்த்தனன் உனனாலே! 485

உன்னாலே உயிர் வாழ்ந்து உலகில் உழல்வேன்,
கண்ணாலேக் காணாதத் திருப்பொருளைக்
கருத்தாலடைவேன்
மின்னலே நீயாகி மேனி தழுவிட்டாலும், -இம்
மேதினியில் உயிர்விட்டும், மேலான பாதம் நினைவேன்!
486

நினைவேன் நெருப்புச் சூரியனாய் உன்னையே,
நினையேன் உன்னைச்சேராதார் உறவினையே,
மனமே வைக்கவேண்டும் மாயவா, கோவிந்தா -நீ
தினமே வரவேண்டும் தெருப்பாடகன் நெஞ்சினிலே! 487

தெருப்பாடகன் நெஞ்சினிலே தெரிந்தது ஒரே கீதம்,
திருப்பாடகனாய் ஆக்கவந்த தெய்வீக இரதம்,
விடும் மூச்சும், படும் பாடும் பாலாஜிக் காலடிக்கே,
கடுங்கண் விட்டேக் கருணை வை கோவிந்தா! 488

கோவிந்தா , நீ இல்லாத இடம் ஏதய்யா?
கோபாலா, நீ போடாத வேடம் ஏதய்யா?
கருணாகரா உன் பாடாதப் பாட்டு ஏதய்யா?
கண்ணனூரா, உனைத்தேடாத கால்களும் எதுவய்யா?
489

எதுவய்யா உன்னில் அடக்கம்?
ஏதய்யா மின்னின் ஒளிக்கே மாற்றும்?
போதுமய்யா இவ்வாழ்வின் நரகமும்,
சாகுமய்யா இங்கு சத்தியமும், என்றும் நீயே சொர்க்கம்!
490

நீயே சொர்க்கம்; நீயே வாழ்வின் விளக்கம்!
நீயே காலம் ; நீயே நதிகளின் மூலம் !
தாயே உன்னில்பெருமை கொண்டாள் !
மாயே, யுன்னையடைந்தார், சிறுமையடையார் 491

சிறுமை அடையார்; சிறு அவமானமும்,
செயலுலகின் ஆணவமும், ஒரு போதும் பெறார்!
கழற்காலுன்னிலே கட்டுண்டுக் கிடப்பர் யாரும் ,
விழலுக்கிறைத்த நீராக ஒருபோதும் மாறார்! 492

மாறார்! மதிமயங்கார்! கதிவிடார்!
மனத்திலேக் குழப்பம் கொள்ளார்! -நீயிருக்க,
தினமொரு தெய்வம் வேண்டி -யாரும்
மனமொடிந்து தெருவில் நில்லார்! 493

தெருவில் நில்லார் தெய்வமுன்னை உணர்ந்தவரே
மருவிக்கொள்வார் மண்தின்றவன் பாதம் தன்னை,
கருகாமல் கண்ணனருளால் கிடப்பார் -யாரும்
பருகாத அமுதமாய் பவனிவந்து பலன் தருவார் ! 494

பலன் தருவார் ஓர்நாளில் பகவானை நினைத்தவரே,
அலமேலு அம்மாவின் அரும் நாயகனைக் கண்டதினால்,
குலமுயர்ந்து , குணமுயர்ந்து , குன்றுபோற்திருவடைந்து,
மலைமேல் விளக்காக ஒளிதந்து உயர்வடைவார் ! 495

உயர்வடைவார் உத்தமன் திருப்பாதம் உளம்
கொண்டதினால்,
அயர்வில்லாமல் தினம் அனந்தனை அணைத்ததினால்,
பயிர்நிலமாய் மாறி பலன் தருவார் - என்றும்,
உயிர் கொண்டு வாழும் உலகசொந்தமாவார் ! 496

உலகசொந்தமாவார் உண்மையறியாதவர்.
கலகமனம் நீப்பார், கண்ணனைக்கண்டவர்,
கலக்கமேதும் இலாதாராவார் அவனன்பு உண்டவர்
நடுக்கமும் நமன் விடனுப்பிடுவார், நாரணனை
நினைப்பவரே! 497

நினைப்பவரே துன்பம் கொண்டு துடித்துவிட்டால் உன்னை,
அணைக்க ஒருகை நீளுமா, உத்தமா ?
வறுமையும், நோயுமே வாழ்வாகிவிட்டால், -மண்ணில்
பொறுமையும் இருக்குமோ, பூந்தேவி இராகவா ! 498

இரகவா என நா சொன்னால் நா மணக்கும் !
கோவிந்தா என கூவிவிட்டால் கோபம் மறையும் !
மாட்டுச்சிறுவனை மனத்தில் வைத்தாலே மனந்துள்ளும்!
-நான்
கேட்டுக்,கேட்டுக் கூத்தாடவே தேவன் குழல்பாடும்! 499

பாடும் என்னெழுத்து யாவும் பரந்தாமன்!
வீடும் அவன் போட்ட பிச்சையின் மூலம் !
காடு படுத்துறங்க அழைத்தாலும் அதுவுங் கண்ணன் விருப்பம்
நாடுமெதுவும், நானென்பதைமறப்பவர்க்கு நாரணன்
சொர்க்கம்! 500

சொர்க்கம் உனைநினைத்தால், அது உன் காலின் கீழ்,
சொத்து, சுகம், எல்லாமும் உன்னைத் துதித்தால் அதுவுன்
செயலின் கீழ்,
எல்லாமும், எல்லார்க்கும் என்பவனே உன்னில்,
அல்லாத செயல்கள் என்னால் ஏதுசெய்ய இயலும்? 501

இயலும் என்று நினைப்பதுவும், இயலாமல் போவதுவும்,
பயிலும் இப்பாழ் மனத்தாலன்றோ ? -பெருமானே
குயிலும் அதன் குஞ்சும் போல் நான் உன்னில் இறங்க,
பயிலும் மனத்தினுள் பரந்தாமாப் பரவி விடு! 502

பரவி விடும் பாலாஜி புகழ் நிழலே,
அடியேனைப் பற்றிக்கொண்டால் , ஒளி நிலவே,
வேண்டுவது என்னவோ இவ்வுலகில் -இன்று
கூண்டுக்கிளி உயிரப்பறவை வந்தது உன் நிழலில்! 503

உன் நிழலில் இளைப்பாறும் ஆசைப்பயணி,
உன் கருணைப் பிச்சையினால் இச்சையடக்கி,
ஆணவப் பாதையில் பூத்தப் பொறாமை முட்கள் விட்டே,
கண்ணனூர் நாடி, கடுகியே நடந்து வந்தேன்! 504

வந்தேன் ஓர் இடையனைத்தேடி, -எனைத்
தந்தேன் அவன் அன்பினைநாடி,
கண்ணனும் எனைக் கண்டு கொண்டான் ,
காதற் சிட்டுக்களாய்ப் பறந்து சென்றோம் ! 505

சென்றோம், பலமொழிமென்றோம் ! நெஞ்சில்
இறைவனார் செய்த எல்லாமும் பெற்றோம் !
பிரிது நாங்கள் பிரிந்தபோது , இப்பொன்னுலகம் ,
பெரிதாய் எனக்கொன்றும் தெரியவில்லையே ! 506

தெரியவில்லையே எத்துன்பமும் உன்னை நினைத்ததனால்,
பணமில்லையே என்ற நிலையுமில்லை, பகவானை
வணங்கியதால்,
யான், எனதுஎன்ற நிலையுமில்லை என்னுத்த மனைத்
தொடர்ந்ததனால்!
காணுகின்ற யாவும் என் கண்ணன் அற்புதமே! 507

அற்புதமே என்று நினைந்து, நினைந்து மாய்பவர,
உன்னருள் தெரியாத மனிதரன்றோ?
உன் செயலினும் அற்புதம் யாதுளது இங்கே,
என் செயல் என்பதும் ஏதுமுண்டோ சங்கே! 508

சங்கேயுன் ஒலியே என்னை உயிர்ப்படுத்தும்,
சக்கரமே யுன்னருளே என்னை நெறிப்படுத்தும்,
நெற்றிநாமம் வெற்றிதனை வீட்டிற்கே அழைத்துவரும், - யான்
பற்றிக்கொண்டப் பரம்பொருளே, நீ யிருக்கப்பயமென்ன?
509

பயமென்ன? பணியவைக்கும் நயமென்ன?
பகவானை நினைத்துவிட்டால் துன்பமென்ன?
நினைவலைகள் மீது நீள துயில் கொள்ளும்.
மாதவன் அருளிருக்க, மனமே மயக்கமென்ன? 510

மயக்கமென்ன அரங்கன் அவன் அன்பிருக்க,
தயக்கமென்ன தயாளன் துணையிருக்க,
பழக்கமெல்லாம் பகவான் விருப்பத்தில்,
புழுக்க மெல்லாம் புனிதனவன் காலடியில்! 511

காலடியில் கிடைக்கும் கடைத்தேற வழியாய் சுகங்கள,
கண்ணடியில் கிடைக்கும் கருணைக்குடங்கள்,
நாரணன் விளையாட்டில் நமனேப் பரியாகும்,
பூரணன் வாசத்தில் புவியேப் புகழாகும்! 512

புகழாகும் உன்னுலகில் என் தேகம் நுழைய,
புண்ணியமும் பெற்றே யுயிர் மணக்கும்,
எண்ணிய கருமங்கள் எம்பிரானாய் நிறையும்,
பண்ணிய அத்தனையும் பகவானின் அருளைக்காட்டும்!
513

காட்டும் கண்ணழகும், கதிரொளியில்
மின்னும் கருப்பழகும், ஆயர்பாடியில்
இசைக்கும் குழலாகும், தேவர்கள் தொழும்,
கலையழகும், மிளிர வரும் கருஞ்சாந்தேப் பூரணமாம்! 514

பூரணமாம்! புனிதநதிப் பிரவாகமாம்!
தோரணமாம்! தோகைமயில் வாகனமாம்!
பூதலத்தில் யான் பறித்த பாரிஜாதம்!
கோமுகத்தில் குடியிருக்கும் வானநாதம்! 515

நாதம் என்று , நம்மைத்தேடிவந்தது - பூம்
பாதம் என்று , மனம் ஓடித் துதித்தது!
அனந்தனவன் உறவினிலே அறிவுபூத்தது,
அச்சுதனின் கருணையெல்லாம் கவியில் கலந்தது! 516

கலந்தது பிரவாகமென நாரண வெள்ளம்!
நடந்தது ஐம்பொறிகள் நடன அரங்கம்!
கிடந்தது மனமே திருமகள் பக்கம்! - தினம்
படர்ந்தது நாரணப்பாசம், வாழ்வின் தொடக்கம்! 517

தொடக்கம் என்று எதை நினைத்தார் மானுடர்,
அடக்கம் என்பதெல்லாம் அன்புசெய்யும் அன்பாலே,
கிடைக்கும் எதுவும் பரமனால் -நம்
விடைக்கும் , வினாவுக்கும் மூலம் அவனே! 518

அவனே சிவன்; சிவனே நாரணன்!
நீருக்குள் பாலும், பாலுக்குள் நீரும் பகவானே!
சைவம் , வைணவம் என்றேதுமில்லை -இங்கு
எல்லா மதமும் அன்பே! அதன் சாரமே! 519

சாரமே யுனைப்பருகி பக்திசெய்தேன்!
உவந்தே நெஞ்சைத் தந்தேன் -இன்று
கசந்ததெல்லாம் கள் வெறிகொண்ட மனத்தாலே,
உகந்தது உன்னிடம் உள்ளது, உத்தமனே அருள்புரி!
520

அருள்புரியும் அழகேசன் , அற்புதன் நாரணன் ,
பொருட் புன்னகையுடன் பூந்தமிழாய் வந்தான் !
என்நாவால் அவனைப்பாட அவனே - பூமியல்
எனைப்படைத்தான் ! அருளோடு பொருளும் தந்தான் !
521

தந்தான் தாமரைக்காலில் சொர்க்கம் காட்டி,
எனை வென்றான்; நன்றே செய்த பேர்க்கு, - நாரணன்
என்றும் புவியெமனை விரட்டும் மருந்தானான்!
ஒன்றென்றிருந்து, பலவாகித்திரியும் பரம்பொருளுமாகினான்!
522

பொருளுமாகினான்! புவித்தலமுமாகினான்!
அருளுமாகினான்! அனந்தனெனும் பூவுமாகினான்!
கண்ணனாகினான்! கருணை இராமனாகினான்!
விண்ணவர் போற்றும் எங்கள் மன்னனாகினான்! 523

மன்னனாகினான் மனம் பெறவே தினமிந்த யாசிப்பு,
என்னாகுமோ என் வாழ்வு , என்றே பயம் ஓட்ட,
விண்ணாளும் வேந்தன் விடியல் நம் உள்ளே,
என்னாளும் நடக்கட்டும், எமபயம் முடியட்டும்! 524

முடியட்டும் உலக தீமைகள் இன்றோடு,
விடியட்டும் ஏழை, பாழை வாழ்வு,
மடியட்டும் இருப்பவன், இல்லாதவன் என்றநிலை -எங்கும்
புகழட்டும் நாரணன் திருப்பாதமே ! 525

திருப்பாதமே, என் உயிர் வாழ இடம் தந்த தேவலோகமே,
உனை நினைந்து, நினைந்து துதிக்கின்ற போது,
எனை மறந்து கண்ணில் அமுதம் சுரக்கும்,
தன்யனைக் கண்ட தாயாய் மனம் இனிக்கும்! 526

இனிக்குமென யானுணர்ந்ததெல்லாம் உன்னன்பு,
கசக்குமென யானறிந்ததெல்லாம் உலகின் மாண்பு,
மறதியென்ற ஒன்றுமுண்டோ, மன்னவனை நினைத்தபோது,
பிறவியினி வேண்டுமா பெருமாளை வரித்தபோது! 527

பெருமாளை வரித்தபோது காதற்பெண்ணானேன்!
அவனருளை வுணர்ந்தபோது ஒரு தாயானேன்!
அருள்களெல்லாம் செயலானபோது அவன் சேயானேன்!
மருள்கின்ற வாழ்வினிலே மன்னனே என் செல்வமானான்!
528

செல்வமானான், யான் வறியவனாய் ஆனபோது,
கல்வியானான் , யான் நிர்மூடனாய் இருந்தபோது,
பண்பானான், அதையான் இழந்து நின்றபோது,
அன்பானான், அதற்காய் யானேங்கியபோது! 529

போதும் எனச் சொன்னவர் யாருண்டு இங்கே,
வேணும் எனச் சொல்லாதார் யாருண்டு இங்கே,
பானுகண்ட மேகமென பொருள் குவிக்கிறார்!
நாணுகின்ற பெண்போல நல்லதிழக்கின்றார்! 530

இழக்கின்றார் பக்குவம் ஏதுமில்லாமல்,
அழுகின்றார் தரணிப் பொருளில்லையே என்று,
விழுகின்றார் பொறாமையெனும் பெருந்தீயினிலே,
கொழுகொம்பென நீயிருப்பதை மனிதக்கொடி
மறந்ததய்யா! 531

மறந்ததய்யா உனைக்கண்டபோது, உலகமே,
சிறந்ததய்யா உன் காலைப் பிடித்ததுமே,
வீண் புகழ்ச்சி மனிதர்களின் துதி விட்டே,
காழ்ப்புணர்ச்சி இல்லாக் கடவுளே நீயே கதி! 532

நீயே கதியென் பரம்பொருளே! -நெஞ்சில்
தாயாய் உனைவரித்தேன், துன்பமில்லை,
நாயாய் படும் பாடு, நாணிலத்தில் பெரும்பாடு,
சேயைக்காப்பாற்று செருக்கில்லாப் பெருமானே! 533

பெருமானே யுன்னால் காலம் தள்ளுகின்றேன்,
வருமானம் என நினைப்பதும் உன் நாமமே,
கடங்காரன் எனவுலகம் பழித்தாலும்,
கண்ணன் காலடியே என் சொத்தாகும்! 534

என் சொத்தாகும் உன் சோதனைகள் எந்நாளும் ,
கண்ணாலே யான் காணாக் கருப்பொருளே ,
கண்ணனூர் செல்வதற்கு உன் விதி வழிதான்,
மன்னனே யான் போக வழிகாட்டு கோவிந்தா! 535

கோவிந்தா உன் பிச்சைகள். என் சொத்துக்கள்,
மாதவா உன் புன்சிரிப்பே, என் பொன்முட்டைகள்,
யாதவகுலகம் கண்ட, யமுனாநதி தீரா,
யாவரும் வணங்கிடும் நேசமலர் கீதா ! 536

கீதாவின் சுரமெல்லாம் நாரணனே!
நாதமெனும் இராகமெல்லாம் கோவிந்தனே ! -அவன்
பாதமெனும் நிழலிலே இளைப்பாற -என்
தோதான மனதும் இன்றே இசைந்ததம்மா ! 537

அம்மா என்ற உன் பிள்ளையின் ஓலம்,
சும்மா இருப்பதும் என்னவோ ஜாலம்,
கண்மாய் திறந்ததெனக் கண்ணீரும் சுரக்கும்,
என் மால் ஏனோ எனைக் காணாதிருக்கின்றான் ! 538

இருக்கின்றான் பிரம்மத்துள் பிரவாகமாய்,
துடிக்கின்றான் அணுவுக்குள் உயிர்மூலமாய்,
சிரிக்கின்றான் மனசுக்குள் அன்பிடமாய்,
நிற்கின்றானு லகுக்குள் வேத சொருபமாய்! 539

வேதசொருபமாய், நாதமூலமாய் நின்ற பெருமரங்கனே,
பாதராகமாய், பவளமேனியாய், விளங்கும் தேவனே -என்
காதல் என்பதும் கண்ணன் லீலைதான் -தினம்
சாதல் மறந்துமே தெய்வ பாலனைத் துதிக்கின்றேன்! 540

துதிக்கின்றேன் தூயஉடல் தாங்கி என் மன்னனையே,
பதிக்கின்றேன் என் தலையதுவை அவன் பாதத்தில்,
எமபயம் நீங்கி, எவர் பயமும் தொடராத,
கம,கமக்கும் காலடியைக் கண்டு கொண்டேன்! 541

கொண்டேன் என் சொந்தமென கோவிந்தன் காலடியை,
உண்டேன் எந்நாளும் அவன் தரும் பிச்சையினை,
அனந்தனவன் இன்னுருவம் எந்தன் மூச்சு,
அரங்கனவன் காலடியே எந்தன் இருப்பு! 542

எந்தனிருப்பு என்பதெல்லாம் இறைவன் சிரிப்பே!
இறைவன் சிரிப்பெல்லாம் அழகின் சிலிர்ப்பே !
அழகின் சிலிர்ப்பெல்லாம் இயற்கையின் உயிர்ப்பு !
இயற்கையின் உயிர்ப்பெல்லாம் என் கோவிந்தன் விழிப்பு!
543

கோவிந்தன் விழிப்பே கோடிசுகம் பெறும்நாள்,
அரவிந்தனருளே ஆன்மீகம் வளர்க்கும் திருநாள்,
பரமானந்தம் என்பதெல்லாம் பகவானின் அருள்வடிவே!
பிரமானந்தம் தருவதெல்லாம் அன்னவனின் காலடியே! 544

அன்னவனின் காலடியே அற்புதத்தின் பெருமருந்து,
என்னவனே கோவிந்தா, உன் வாசல் வந்தேன்,
வாழ்வோ,சாவோ, பெருமாளே யுனையே நம்பினேன்,
எனக்குள் புகுந்து, எனையாட்டும் பெருவொளியே நீயே கதி!
545

கதி மோட்சம் என்பதெல்லாம் கண்ணன் பாதந்தான்!
விதிவசம் என்பதுவும் பரந்தாமனன்பு வேதந்தான் !
எதை, எதை எப்படி ஆற்றுவதென்பதுவும் , - புவியில்
விதை,விதைத்த விமலன் செயலன்றோ ? 546

விமலனின் செயலன்றோ விண்ணில் யானேறுவதும்,
கமலக் கண்ணன் காலடியே கற்பக விருட்சம்,
இமயமே இவ்வேழையை ஏற்றுக்கொள் -நல்ல
சமயமே நாராயணா உன்னை யான் உணர்வதும் ! 547

யான் உணர்வதும் உன்னுடைய அருளாலே,
வீண்போன வாழ்வெல்லாம் பாவி என்னாலே,
"நான்" என்பதை விட்டேன் நாராயணா ,
வான் விட்டு வந்தென் வாழ்வைத் தந்துவிடு ! 548

தந்துவிடு தரணிவாழ இப்புவிச்செல்வம் யாவும்,
வந்துவிடு தர்மமென வாழ்விக்க எந்நாளும்,
குன்றுமேல் விளக்காக, குறைபோக்கும் மருந்தாக,
என்றுமே யெனக்குள் உலவும் நாராயணா, நீயே சரணம்!
549

சரணம் சண்முகன் மாமனே, நாளும் நீ
வரணும் என் மனத்தினிலே, கோளும் நீ
கோமேதகக் காலனே, கோவிந்தா எந்நாளும் முன்
நாமமதை எண்ணிவிட்டால், இல்லையயம் ஒருநாளும்! 550

ஒருநாளும் உனையன்றி, பிரிதொன்றறியேனே,
திருநாளும் என் வாழ்வில் உன்னோடு உறவாடும் நாளே - என்
பெருமாளே கைவிடாக் கருப்பொருளே,
திருமகள் என்னில்லம் வந்தாலே மகிழ்வேனே ! 551

மகிழ்வேனே, மன்னன் உன் காலடி என் சென்னி படவே,
குழிவேனே, குபேரன் உன் கருணை ஒளிக் கூடவே,
கோவிந்தன் நீயிருக்கையில் குறையென்ன இப்புவியில்,
கோபாலன் உன்முகம் கண்டே, கூத்தாடி நின்றேனே உன்னடியில்! 552

உன்னடியில் சுரக்கும் நீர் யானே -உன்
கண்ணடியில் விளைந்த கருணையும் யானே,
பெண்மடியில் கிடக்கும் பிள்ளையென வந்தவனே,
என்முடிவில் வெற்றியென விளங்கும் பெருமாளே , 553

பெருமாளே உனையே நம்பினேன்; உலகில் வாழ்ந்தேன்!
திருமகள் திருப்பொருளே! தெய்வத்துள் பெருந்தெய்வமே!
மறுப்பில்லா உன் அன்பு மழை இன்பப்பயிர் செய்யவே,
விருப்பமெல்லாம் இடையனோடு, என் இன்பப் புயலே ! 554

புயலே நீ என் வாழ்வில் என்றும் ஒளிப்புயலே!
தொழிலே உன் புன்னகையின் மறுவடிவே !
ஏழுமலை வைத்தியமே என் நோய் போக்கும்,
இளஞ்சுடரவனாலே அருள்வழி திறக்கும் ! 555

வழி திறக்கும் ; வண்ண, வண்ண ஒளி பிறக்கும்,
கோபாலன் குழலொளியால் குவலயமே மகிழ்ந்திருக்கும்,
பூபாலன் கருணையெல்லாம் பூதலத்தில் நிலவிவரும்,
பூமகளின் சிரிப்பெல்லாம் தர்மத்திலே உலவிவரும் ! 556

வரும் எதுவும் நாரணன் தரும் நல்லறமே !
தரும் சுகமும் தர்மனவன் இல்லறமே!
பெறும் எல்லாமும் பெருமாளின் கனவே,
நிறம் மாறினாலே நெருங்கிவிடும் துன்பமே! 557

துன்பமே நீக்கி நின் காலடியில் வேண்டுவன எல்லாம்,
இன்பமே பாக்கி இனி எந்தனுக்கே என்பன எல்லாம்,
துயர் குதிரையோட்ட வந்தநான், நாரண சவுக்கால்,
இன்பவூர் ஏகிடுவேன், எம்பிரான் புண்ணியத்தால்! 558

புண்ணியத்தால் புரவலனை நினைக்கின்ற மனம் வந்தது -அவன்
பண்ணிய மந்திரத்தால் துதிக்கின்ற செயலும் வந்தது!
கண்ணியநாதன் கனவுலகம் கையில் வந்தது -என்
எண்ணிய எண்ணம் பலிக்க இறைவனால் பரவசமானேன்! 559

பரவசமானேன்! பங்கயம் வீசும் நற் நாற்றமானேன்!
உறவாகிப் பிரியும் மானுடர் விடம் கண்டேன்,
பிறவாத நிலைவேண்டி, பெருமானை நெருங்கி நின்றேன்!
இறவாப் புகழுடைய என் ஐய்யன் எல்லாம் தந்தானே! 560

உ

# 'திருநாராயண அலங்காரம்'

கால் கண்டேன்; கழல்கண்டேன் ; கண்ணனைச் -செங்
கண்ணனாய்க் காணக்கண்டேன்!- வார்துளசிமாலை,
அணிந்தே மார் மணக்கக்கண்டேன்! கைத்திகிரி
சூழ்திருமகளோடே மஞ்சம் ஆடக் கண்டேன்! 1

கிண்,கிணிக்கும் மணிகண்டேன்!கீதைநாயகன்
பொன்மேனிகண்டேன்! வண்டு சூழ் மாலையென,
பூமுகம் சிவக்கக்கண்டேன், வானடிக்குழம்பாகப்
பூம்பாதம் உயிர் அளக்கக்கண்டேன்! 2

கையிலொருக்குழலும், கக்கத்தேப் பெண் மயிலும்,
மெய்யெலாம் குவிந்தப் புன்னகையும், மேனிசிலிர்க்கும்
ஒளிப்பிழம்பும், ஐயன் அடிவைத்த அண்டசராசரமும்,
கண்டு,கண்டு மனம் உண்டுயிர்த்தேன், உவகையானேன்! 3

சூரியனொருவிழியே, சந்திரன் மறுவிழியே,
பிறைநுதல் வானமென, பெரும்பாம்புக் குடையுடனே,
குழைகளும் கன்னமாடும்; குவின் புன்னகைக் குறுகுறுக்கும்!
மணிநாத ஒலியாக மன்னவன் சிரிப்பிருக்கும்! 4

வார்கூந்தல் இடைமூடும், வண்ண மேனியும் தார்ப்பாய்ச்சும்,
அணி,மணிகள் அத்தனையும் ஐயனை வணங்கி நிற்கும்!
இட்டஅடியும் , எடுத்த அடியும், இயம்பி பலக்கூறிடவே,
எம்பிரான் கருடனேற, இயற்கையுமே அடிபணியும்! 5

கோதையவள் விட்டொழித்தே ராதை பக்கம் வந்தமன்னன்,
பாதைமாறி சிரிப்பதையே பார்த்துப் பார்த்து நான் மயங்க,
ஆவினங்கள் தலையாட்டும்; ஆன்ற மனம் ஜதிபோடும்,
தேனினங்கள் சேர்ந்து, சுகம் ராதையென மாறிவரும்! 6

தோளும், இருதோள் துலங்கும் மாலையும்,
மாலைசூழ் மணிக்குல வண்டுகளும், மஞ்சள் நிறமணிப்பட்டும்,
பொன்னணி ஆபரணமும், பொன் மிஞ்சும் துளசித்தளிர்களும்,
திருமண்ணோடு சேர்ந்த சந்தனமும் மணக்க வரும்
மாமணியே! 7

அதல, விதல, பாதாளசொந்தமெல்லாம் - என்
ஐயன் அருளிருந்தால் பூலோகமாகிவிடும்,- மானுடப்
பொய்யெனும் புரவிவிட்டே, மெய்யூர் பாதைநடக்க,
செய்பக்தி மனம்நாடும்; தினம் சேவித்தேக் கூத்தாடும்!22

வார் சடையில் வண்ணஒளிப் பாய்ந்திருக்கும் - மேக
மார்பினிலே அணி,மணிகள் அசைந்திருக்கும் !
கார்வண்ணன் காலிரண்டில் கனகம் வந்து குடியிருக்கும்,
பார்புகழும் பக்தியெல்லாம் பரமனவனில் புன்னகைக்கும்! 23

வைரமொடு பவளமுமே நெற்றிநாமமென துலங்கும்,
நீள்விழிகள் கயலாகி காதில் கொஞ்சிமகிழும் - நீள்
வானமொருப் பட்டாய், வண்ணநாயகன் உடல்போர்த்தும்,- என்
தாயுடனே சேர்ந்தமேனி தளிர் தங்கமெனும் கொடியாகும்! 24

கால்மடித்து,தவழ்ந்து, கைமடித்து வெண்ணைய் மொக்கும்,
பால்வண்ணன் மேகலையில் பலதேவர் குடியிருப்பர்- அவன்
மாடோட்டும் சிறுகோளில் நான்குவேதம் புன்னகைக்கும்
- ஐயன்
மால்மனதோ பக்தரையே எண்ணி, எண்ணி, வியந்திருக்கும்! 25

அவல் மறுக்கப், பிடிக்கும்கையும், ஐயன் ஆசையென
விரிந்த வாயும்,
கந்தையென கோலம்கொண்ட அன்புக்கடன்பட்ட குசேலன்
செயலும்,
நிந்தைசெய்உலகில், நிமிருகின்ற நிறைந்தத் திருவும்,
விந்தையென மாலில், விந்தைசெய்து கொலுவிருக்கும்!26

அரளியிதழ் துடி,துடிக்க,அமுதநெஞ்சு தேரேற,
அரக்கர்குல செம்மல் கம்சனை துவம்சம் பண்ண,
கண்ணப்பவிருந்துஒன்று கருணைமருந்தாகும்,
கனகனவன் தேர்ப்பாதை புவிவெற்றி வழியாகும்! 27

கதிரொளி விழிக்கும் இடம்நோக்கி,காலிரண்டில்,
ஓர்கால் பூமிபற்ற, வலக்காலும் மாபலியின் தலையேற,
தென்பெண்ணைக் கரையான, திருக்கோவிலூர் கோவிலிலே,
திருவிக்கிரமசுவாமியென தென்னகம் குடிவந்தான்! 28

கையே தலையணையாய், கடற்பாம்பே பஞ்சணையாய் -ஒளி
வேதநாயகியே திருமதியாய்,நாதமெல்லாம் கீதைசாரமாய்,
பாதகமலங்கள் பக்தர்வீடாய், பரமசுகம் நித்திரையாய்,
திருவரங்கம் படைத்திருக்கும், தென்பெண்ணைப்
பெருமாளே! 29

கரியது கால்பற்றி முதலையொன்று யமனாக - துயருக்க
கரிவாய்க் குரல்கேட்டு,அருளாய் ஓடிவந்த - என்
ஆதிமூலன் அடிபோற்றி! அனந்தனவன் அருள்போற்றி!
சோதியானவன் கால்போற்றி சொக்கத்தங்கமே போற்றி!
போற்றி! 30

சித்தமேறும்,சிந்தித்து,சிந்தித்து,உழலும், சிந்தைபற்றி
எந்தைநாதன் பாதம் வந்திக்கும் ; வந்தித்தே
வார்த்தை நூறு, ஆயிரம், கோடியெனப் பெருகிஓடும்,
நாதன் நாராயணன் நாமமன்றி வேறு சொல்லுமோ என்
நாவுமே! 31

பக்தரே பீடமாய், அவர்வார்த்தையே பாரிஜாதமாய்
வேதமே அணியாய், நாதநாயகன் கொண்ட கோலம்,
காதம்போயினும் மறக்குமோ மனம் -என்
நாராயனன் மேல் சிந்தையே ஆடிடும் தினம்! 32

துளசித்தளக்காட்டில் தூயபெருமாள், - வண்டு
துளைத்திடும்பூ, தூயமணி அவரருளால்,
துள்ளிவிளையாடும் மனது, துயர்நீங்கி,-நெஞ்சம்
அள்ளிப் பருகும் கோலம் தான் என்ன? 33

முத்தேவர் கூடிவந்து கவரிவீச - தேவரோடு
முப்பெண்ணும் வாயசைத்து மங்கலம் சொல்ல - இயம்பிப்
படைத்தபொருள் அத்தனையும் பவளநாயகன் அருளுணர
நாரணன் உலாவந்தான் நடுவீதியிலே! 34

தங்கத்தில் இழைத்ததேர், வைரஅச்சில் சுழல,
நவமணிகள் அத்தனையும் அதில்கலந்து சத்தமிட,
ஆதிசேடன் ஓடிவந்து அன்புடனே குடைபிடிக்க,
சங்கு, சக்கரமேந்திய நர நாரணச்சாரதியே வருக! 35

வானெடுத்து இடையுடுத்தி, வண்ணமயில்
நிறமெடுத்து அணிபூட்டி, அம்புலியைப்பொட்டாக்கி,
அழகுநடைக்கொஞ்சிவரும், பெருமாளே - என்
அம்மாவின் கைபிடித்தத் திருவருளே! 36

ஒளியே வடிவாக, ஒலியேஅணியாக உலகுயிர்கள்
நிலையே இடைத்துணியாக, என்றும் உளம்கொள்ளும்
புன்சிரிப்பில்
நாரணன் நின்றான்! நமச்சிவாயம் காட்டினான்!
படைப்பழகே பவனியென அவன் காரணமானான்! 37

அஞ்சனைமகன் அன்புசெய்து, செய்துஎன்புருக,
பஞ்சணைப்பாம்பும் பரந்தாமன் கால்பட்டே நெஞ்சுருக
கருடனும் கனகமவன் பக்தியில் தெம்பேற, - என்
உயிரின் நோன்போ உத்தமத்தாயுடன் நடந்தனனே! 38

பார்த்தன் சாரதியின் பட்டுக்கைக் குழலோ பலபேசும்,
பக்தர்நெஞ்சோ பரந்தாமன் அணிக்கால்கண்டே நெஞ்சுமருகும்
இறைவி தாங்கும் அவனின் இடதுமார்பும் பெருமைகூட்டும்,
பிறவி போக்கும் நாரணன் பொன்னலங்காரம் அருளே
காட்டும்! 39

கம்சன் மாண்டகையில் கதையேத்துலங்க,
இரண்யவதம் கொண்டகைகள் சங்கு,சக்கரம் தாங்க,
பக்தருக்கருளும் பல்லருளாய் ஒருகைவிளங்க - என்
நாரணன் இருந்தான், பூதேவி, ஸ்ரீதேவியுடனே! 40

கோபியர்கள் புடைசூழ யமுனாநதிதீரம் - பொன்
இராதையவள் புன்னகைக்கும் மன்னன் குழல் கீதம்,
வேதம்பல வாழ்த்திவிட தெய்வக்காதல் மலரும்,
நாதமணி சரங்களெல்லாம் நாரணன் புகழ்பாடும்! 41

மின்னல் ஒன்று பிடித்தே மேனிசெய்து - கருங்
கன்னல் சுவை கொண்டே இதழ் வடித்து, - வேத
இராகங்கள் கருதிகூட்டி உயிர்தந்தால் - நாதன்
பாதங்கள் காட்டாதோ நாரண ரூபத்தை! 42

கங்கைநீர் பாய்ந்திருக்க காவிரிநிலம் - நல்
நங்கையென பூத்திருக்கும் நந்தவனம் - நல்
மலரெடுத்து தொடுத்து வைத்த பக்திமாலை - நல் துளசி
தளிரெடுத்து அதில் சேர்த்தால் அது நாரணமாலை! 43

திருமலையில் தேர்ஓடும் பாதையிலே மனிதவெள்ளம்,
மனிதரெல்லாம் சூட்டிவிட்ட கோவிந்தன் காலில் பக்திமகுடம்,
ஸ்ரீதேவி, பூதேவி நாச்சியாரின் அன்புடனே நாரணப்பயணம்,
காணவேகண்கோடிவேண்டும், அதுவும் நாரணன் அருளாகும்!44

வைரம் இழைத்த இருசக்கரங்கள் வண்ணப்பொன்மணிகள்
ஆர்ப்பரிக்க,
பச்சை, நீலமென பலஅச்சுக் கச்சிதமாய் தேர்சுழல,
பொன்சங்கிலிகள் தேர்வடமாய் மாறி மனிதர்இழுக்க,
நான் மறை நாயகன் உலாவந்தான் திருமலையில்! 45

துளசித்தளமாலைகள் உடல்மறைக்க, தூயமணி
அத்தனையும் மெருகூட்ட,
நவமணிகள் இழைத்தப் பட்டில் நாரணன் புகழ் மணக்க,
வேதியரும், மற்றவரும், வேதனை மறந்தே நாதனை
நினைக்க,
பாதைதனை பக்தியிலே விளைவித்தேப் பவனி வந்தான்
பகவானே! 46

மூவுலக தேவர்கள் முந்திவந்து துதிபாட,
வாயுவும் வருணனும் பந்திபார்த்துப் பரிமாற,
அக்கினியும் அடுப்பாகி, அணையாத்தீயாக - நாரணன்
நன்மங்கலம் சூட்டியே, நாணமகள் தனதாக்கினான்! 47

சிவனோடு, பிரம்மாசிரித்தே பணிசெய்ய,
தேவரனைவரும் நாரணன் கால்பற்றிக் கவிபாட,
பூமகள் நாணி தலைகுனிய, என் நாதனும்
கைத்தலம் பற்றியேக் கன்னியை அடைந்தான்! 48

இந்திரன், சந்திரன் ஏனையோர் யாவரும்
மந்திரத்தான் உடல் அழகு செய்ய - குபேரன்
கொட்டிக்கொடுத்த செல்வம் குப்பையெனக் குவிந்திருக்க,
குலமகள், திருமகள், நாரணன் கால் பணிந்தாள்! 49

முகமே நிலவாகும், முத்துப்புன்னகையே அருளாகும்,
குழலே வேதமாகும், குவின் விளையாட்டே தர்மமாகும்,
பாரில் புகழணியே அவன் செயலாக - என் பரந்தாமன்
ஒளிகூட்டி, ஒளியாக உயர்ந்து நின்றான்! 50

முங்கி, முங்கிக் குளித்தக் கோபியரும் கரையடைந்து,
தங்கள் துகில் மறைய தவித்தேப்பார்வை செலவழிக்க,
பங்கயப் பாதத்தான் குழலொளியில் துகில்காட்ட,- கோபியர்
பருவத்தை மூடமறந்தேப் பக்தியிலே மோகித்தார்! 51

ஒருபோது வாலிபனாய் கைநீட்டிக் காதல் தந்தான்!
மறுப்பேதும் சொல்லாமல் சிறு குழவியென நகையிட்டான்,
பேதையர்கள் காதலனைத்துறந்தே கண்ணனைக் கண்டார்!
வதைபடும் ஊழ்மறக்க வாரணனை அணைந்தார்! 52

வேதமே ரூபமாய், ஜானகிகைக்கொண்ட தலைவன்,
நாதமகள் அடித்தொடர,செம்மல் கலந்த இளையவனும்,
அன்பூட்டி தியாகமாக, கைத்தனுசும், கடல்நிறமுங்காட்டி,
கருணைவித்தாய் காலத்தில் உலாவந்தான்! 53

நாரணன் நோக்கோ நேர் நின்று பக்தர் அன்பில் தோய
பக்தனின் கருத்தோ பகவான் கால் பாய,
பக்கத்தமர்ந்தவளின் கூர்நோக்கோ கொதித்தாட,
மொக்கென விரிந்த நாயகன் விநயமாய் நகைப்பான்!54

தேவியோ முகம் சிவப்பாள், தன்பங்கைப் பக்தர்
பறிப்பதனால்,
நாதியற்ற நாயகனன்பு என்றும் பக்தர்க்கேயென்பதனால்
அழுக்காறு கொண்டே அண்ணல் தேவியும் மணங் குழைய,
இழுக்கில்லா எம்மிறைவன் அன்பு செய்து, செய்து
புரிப்பான்! 55

பதுமம் ஒரு அழகாக. பதுமாவதியும் அருகிருக்க,
குமுதம் ஒரு குவிப்பாக, குணக்குன்றும் துயின்றிருக்க,
நிதமும் தவறாதப் பக்திமலர் பல்லாயிரம் அவன் பாதம்
பூத்திருக்க - பரம
பதமும் வண்ண மணித்தோளன் அழகினிலே தவமேற்றும்! 56

சின்னவாய் அமுதாய் மண்தின்ன - திருத்
தேவகி மைந்தனும் யசோதை உயிர் அளக்க
பண்ணிய மந்திரமாய் பார்த்தன் குரு உலகுகாட்ட,
எண்ணிய இன்பமெல்லாம் இதயத்தில் மலர்ந்ததாட! 57

நான்குவேதம் சக்கரமாய்,நமச்சிவாயம் சாரதியாய்,
நான்முகன் பக்கத்தே, நாரணன் கைபிடித்தத் திருமகளும் மகிழ்வுறவே,
ஆதிமூலம் உலா வந்தான் உலகத்தேரினிலே - என்
நாதநாயகன் வடிவே நல் மோட்ச வீடாம்! 58

பாம்பில் படுத்தவனை, பாம்பணிந்த ஒருவன் அணைக்க,
செம்பதுமத்தில் நின்றவளை, பதுமமாம் பார்வதி அணைக்க,
யாவரும், தேவரும், இன்னும் பல ஞான முனிவரும்,
ஏத்திப்புகழ்பாட,எம்பெருமான் அருளாய் நின்றான்! 59

பாதமே பவுனாக, பனிசிரிப்பே அருளாக,
வேதமே குணமாக, வினைவிதியே தன்வழியாக,
கருணையே அணிகலனாய், காதலெனும் மெய்பக்தியன்பாய்,
சோதனை நெருப்பே தன்தொழிலாய், கடைவிரித்தான் கண்ணனே! 60

ஒன்றுக்குள் ஒன்றாகி, ஒன்று பலவாகி - என்றும்
உயிர்க்கெலாம் அருளாகி, உழலும் உறவாகி -நல்
ஒளித்தடம் களிநடனம் புரியும், கார்மேக வனப்பாகி,
உள்ளொலியாய் எனக்குள் உறைந்தபெருமாளே! 61

அண்டமும், அகண்டமும், சுத்தபாதாளமும்,
அண்டசராசரங்களும், அனுதினமும் துதிக்கும்,
எந்தைநாரணன் திருப்பாதம் எல்லாமும் அளிக்கும்,- என்
ஏந்தலை நினைத்தாலே முக்திவழிகிடைக்கும்! 62

கன்னங்கரிய செம்மல் காலில் உப்புப்படிவம் - அதற்கோ
விண்ணமுதம் உண்டபக்தர்கள் கண்ணீர்க்காரணம்,
புண்ணியன் உலாவந்த புனிதத்தேர்ப்பாதை,
எண்ணிலா பக்தர் அன்பின் இதயத்தாமரை! 63

திருக்கண்டேன்; திருமேனி கண்டேன்; திருவிலுறையும் திருமால்
கண்டேன்!
திருத்தாமனங்கூட, திருவின் திருப்பாதம் கண்டே,
திருவாகக் கண்டேன்!
திருமலைத்திருப்பதி திருநாயகன் திருவென பக்தர்வெள்ளம்
கண்டேன்
திருமாலெனும் திருவிலே திருந்தியே யென் மனங்கூடக்
கண்டேன்! 64

ஸ்ரீதேவி, பூதேவி நடுநின்ற நாரணனே -என்
சீதளத்துப் பூமியிலே தெய்வமாய் ஆனவனே,
வனப்பே ஓர் வடிவாய், வானளந்த தேவரசம் -பக்தி
நினைப்பே நிலையாக்கும் நெடுமால் பூரணஅலங்காரம்! 65

பாதத்தில் வேதம் வந்து குடியேறும். -என்றும்
நாதங்கள் பேசும் திருநாரண மந்திரம் கண்
சாரங்கள் கட்டிடும் கற்பனை வடிவழகே என்
நேரங்கள் என்பதுவும் உனை நினைப்பதுவே! 66

பூதலத்தில் உதித்ததோர் அன்புக் குழம்பே,
காலத்தில் கனிந்ததோர் கனகமணி அருட்பழமே,
ஞாயிறுவும், நந்தாவிளக்கான நிறை மதியும்,
பாயிரம் தோன்றும் பற்பலக் கற்பனையும் நாரணனே! 67

பாலையிலே உதித்த என் பக்திநூல் ஆலையே,
பருவத்தில் தினம் பெய்த நெடுமால் மழையே,
ஓவியங்கள் பேசி. அற்புதமானதுஉன் எழிலே,
காவியங்கள் களித்தேக் கதைகூறிடும் உன் புகழே! 68

பசித்திடும் வேளையில் பசிபோக்கும் உணவாவாய்,
உருசித்திடும் உணவின் உள்ளே அருஞ்சுவையாவாய்
கருவிற்குள் திருவாக்கி கண்ணொளிர் சேர்த்திடுவாய்,
பெருமையுள் உருவான பெரும் பாம்பு நாயகனே! 69

வசைபாடும் மனதெனக்கு இசைதலைவா -என்
நசைமனம் தேடும் தினமொரு புது உறவு,
கசையடி கொடுத்த விதிவழி நாயகா -உன்
கழலடி அலங்காரம் என் உயிரல்லவா! 70

ஒருயிர்,உலகுயிர், எவ்வுயிராயினும் தாயன்பு ஈந்து,
உலக அச்சாய் அன்பென்ற ஒன்றை அமைதது,
நிலையுலகை, நிமலனுன்னடியாய் காதல் வழிதந்து,
நிதமொரு அலங்காரமாய் அமைந்த என் பெருமாளே!71

வேதங்கள் தேடியும், வேதியர் முயன்றும்,
யாரும் காணா அற்புதப்பாதத்தைத்தேடவே,
பாரில் உழன்றேன், பல பணி செய்தேன்,
பரந்தாமன் அலங்காரத்தில் அத்தனையும் உண்பேன்!72

கண்ணிரண்டும் பெரியகுளம் ; காட்சியெல்லாம் பூபாளம்,
விண்ணமைந்த வேதநாதம்; பூமிவந்த பூதமேகம் ,
திருவண்ணாமலை தேர்வீதியிலே வடக்கமர்ந்த நேசகீதம்,
பூதநாராயணன் பொன்னலங்காரம் என் காதல் தேசம்! 73

என்ஐய்யனை நினைந்தேன்; மேனிசிலிர்க்க
மெய்யெலாம் விழித்தேன்; கண்ணாட்சி உண்டே
கண்ணனுள் கட்டுண்டு அவன்றன் கழலடி கண்டேன்!
என்றும், யாரும் காணா பேர்பெற்று நின்றேன்! 74

செம்பஞ்சுக் குழம்பொன்று சிறுநெருப்பு தலையணிய
மென்பஞ்சுக்காலோ மேனியெலாம் தடவ உயிர விழித்தேன,
என்நெஞ்சுப்பரந்த இளஞ்செம்மலை,
கண்துஞ்சாது கண்டே கடைத்தேறினேன்! 75

விண்மீனின் விழிபெற்று வீசும்தென்றல் குளிரணிந்து,
வெண்ணிலவு உடலினிலே, விளையும் நல் வாசனைக்
குவித்து.
காற்றுக்குள் காலைவிட்டுக் கனவிலே நடைபழகி,
எம்பெருமான் உலாவந்ததென்ன என்னுயிரே! 76

முல்லையவிழக் கிள்ளையென தொல்லைபல தந்தக்
கள்வன்.
இல்லையெனாதுத் தந்த எல்லையற்றக் கருணைக்கடலின்
தலைவன்,
எம்பெருமான் நாரணன், இவ்வுலகு ஆவிநாயகன்,- அணி, மணி
அலங்காரம் கண்டே அடிமனது இன்பம் உண்டேன்! 77

வைரமணிச்சரங்களெல்லாம் வண்ணமேனித் தாங்கும் !
வானுதித்த மின்மினிகள் வார் சடையில் நுண்ணி, நுண்ணி
மின்னும்!
காணுகின்ற எழிலெல்லாம் கண்ணனவன் திருக்கோலம்!- என்
கண்விழியில் பூத்ததொரு மேல்வனத்துப்பூகோளம்! 78

அடியீரம் இருந்தால் நுனிதழைக்கும்,
ஆண்டவனில் அன்பிருந்தால் வாழ்வு சிறக்கும்,
பந்தமில்லாப் பகலவனாம் என்நாரணன் பாதம்,
சொந்தமெல்லாம் செக்கத்தங்கமாகும் காலம்! 79

பஞ்சுமெத்தைக் கால்களிலே பக்தர்சூடும் பன்னீர்ப்பூ,,
நெஞ்சினிக்கும் சிவப்புப்பட்டு நெடுமேனியிலே,பெரும் வனப்பு,
வண்டுநுழைப் பூக்களெல்லாம் வாசவனால் திரண்டிருக்கும்
- எனை
வென்றுவிடும் மன்னவன் நாரணத்திருவலங்காரம்! 80

வெள்ளிநிலாத் துள்ளிவரும் வேளையிலே,
அள்ளிக்குளப்பெண்களெல்லாம் அன்பிணைந்துப்
பூக்கையிலே,
சொல்லிவரும் தென்றல் தெப்பம் என்னுடனே,
சுகம் கோடிபலத் தந்துவிடும் பக்தியிலே! 81

குற்றம் துறந்தகாலில் குடியிருக்கும் என் மனது,
சுற்றமென சுதாமன் நண்பன் பின் சுற்றும் உள்மனது,
ஏந்தலின் அழகை எண்ணி எண்ணி சுகம்காணும்,
என்றும்எம்பிரான் அழகொளியில்இணைந்தே தவம்பண்ணும்! 82

மனத்திலூறும் முயற்சி தன்னில் உன்னழகிருக்கும்,
அந்த அழகினிலே என் மனது உழன்றிருக்கும்,
கோவிந்தன் கால்கழலில் கொஞ்சித்தமிழ் விளையாடும்-அக்
கோலமெல்லாம் நான் உருசிப்பேன் என் காலமெல்லாம்! 83

ஐம்பெரும் பூதங்கள் அணிகின்றக் கழலே,
அஞ்சாத நெஞ்சினில், அருளாகி வளரும் எழிலே,
விஞ்ஞாத தமிழ்மூன்றும் விருந்தாகத் தானுண்டு
எஞ்ஞான்றும் இலங்கித்துலங்கும் எம்பிரானே! 84

அவனவன் கடைத்தேற அவனியில் கடைவிரித்தான்,
அண்ணலின் விடைதேட புவனியில் மடைதிறந்தான்,
செத்தும் சுகப்படுவோம் என்றே சொத்துசேர்த்தான்!
கத்துமாங்கடல்முத்துவாழ்வைக்கடைசியில்இழந்துநின்றான்!
85

மடமையிலூறும் மனத்தினைப் பணமாளும்,
பணமது மனத்தினை பச்சைக்கொலைசெய்யும்,
இத்தரைமனிதரோ இறைவனருள் தெரியாமல்,
முத்திரைப்பதித்தவரை முகம் சுளித்து வெறுத்தாரே! 86

என்றைக்குக்கடனொழியும் இமயவரம்பன் கால் தெரியும்,
புவிநெருப்பில் பொசுங்கும் மனமே, என்றே பூபாளமாகும,
உள்ளத்தில் உவகையான உத்தமனே நாராயணா! - உன்
கள்ளமனது எனையென்று தள்ளாமல் பார்த்துதவும்! 87

காதுதொடும் விழிமீன்கள் துள்ளியாடும்,
மாது கலந்தமார்பினிலே அவள் அழகாடும்,
அழகனவன் உலகுதந்த அரங்கன் மேனி,
பழகும் பக்தர்கண்டு பலவிதமாயக் கூத்தாடும்! 88

நேர்நின்ற நுதல் கொஞ்சி மலராகும்
வார் நின்ற குழல்மலரோ புகழ் பாடும்!
நெடுமாலின் அழகெல்லாம் அன்புப்புனலாடும்!
சுடுகின்ற மனந்தன்னில் அவனிருந்தால் அன்பாடும்! 89

சூரியனொரு விழியே குளிர் சந்திரனொரு விழியே,
மாறிய அழகும் மாலில் கூடிக்கூடிவரும் வழியே
நாறிய மலராகி நாரணப் பூக்கும், அவனாழியேக்
கூறியபக்தர் என்றால் குறையில்லை உலகினுக்கே! 90

கலிங்கம் அரையுடுத்தி அதன்மேல் காஞ்சியணிந்து
குலுங்கும் தோள் தன்னில் கோலமயில் தானணைந்து
துலங்கும் நாமம் உடம்பினில் மின்னலாகிப் புகுந்து,
கலங்கும் மனங்காக்கும், கண்ணன் கழலடியெனைக்காக்கும்!91

(கலிங்கம் = துணி , கஞ்சி = பொன்அரைஞான்.)

துலங்கும் வெள்ளுடை செந்தாமரை திருவுடையாள்,
மயங்கும் மீனிடையவன் மீனாடும் போதினிலே,
காலமே கருத்தரிக்கும்; கண்ணனில் உயிர்ப் பிறக்கும்!
ஞாலத்தில் நான் கண்டதெல்லாம் உயிர் நாராயணன்
காலடியே! 92

கருப்பின் கருப்பினும் தனிக்கருப்பு மின்னலாடும்,
சிறப்பின் சிறப்பினும் சிந்திக்கும் உயர் கமலம்,
பொற்பின் பாதத்தில் உலகாடிஉயிர் மகிழும்!
இறப்பின் அவனே எழிலாய் யெனைக்காத்திடுவான்! 93

கனகமெனும் உயிர்க்குழம்பில் யான் கண்ட
அணங்கனெனும் திருமாலே! உன்னெழிலில்
உலகுருளும் ! உலகுருளில் உயிரெழும்பும்!
அளகிளா விளையாட்டின் ஆதிமூலம் நீயன்றோ? 94

களியுருளும் தனியெழிலின் கவிப்புனலே!
துளிவடிவம் யெடுத்தாலும் துஞ்சாஉயிர் அனலே!
அருள்கின்ற தவம்கூட நாரணன் பேரருளே!
மருள்கின்ற வாழ்வினொளி எஞ்சூரியன் திருவருளே! 95

சிந்தையுறை சீரினமை விந்தையுறவே - நல்
தந்தைமறை தந்தமையே கீதைதருவே, - பல்
நிந்தைவழி பக்தரெனினும் அன்புருவால் - அவரை
எந்தையென்று ஏற்றுக்கொள்வான் நாரணனே! 96

ஈட்டியெனப் பொருது மிருவிழிகள் - பாவை
காட்டிய மணிக்கொங்கை வழித்தடங்கள்,
நாட்டிய ஊடலில் பெயர்த்தெடுத்தபெண் விழியோ - நாரணன்
மீட்டிய நரம்பணைத்தும் பெயர்ச்சொல்லி விளம்பிடுமே! 97

என் மனம் எனைக்கொல்லும் தினம் நாழிகை
உடன்கொல்லும் பிழைப்பின்றி வழிதேடும்
வாழ்க்கையில் பொய்யாடும் என் தெய்வமே - நீ
காக்கையில் கண்ணீரும் படுமோ யென் கன்னத்தில்! 98

கடமைசெய்தேன்; கயமைமறந்தேன், என்றும் உன்னிழலில்
இளைப்பாறும் இளமானாய் நானிருப்பேன் - நீ
எனை எட்டி உதைத்தபோதும் அட்டிக்கிடைத்ததாய்- உன்
அன்புவட்டி வாங்கி வாழ்க்கை நடத்துவேன்! 99

ஒருதொழில் ஒருவழியில்லாது உனை நினைத்தேத்
துடித்தேன்,
ஒருபொழில் தருவெழில் என நீ காற்றேறி வந்தால்,
சுடுமணல் வாழ்வும் சுகமாகும்; சுகமளித்தே நிதம்
தர்மத்தில் குளிரக்குளிர என் மனம் தரணியாளும்! 100

தமிழ்பாடி ஒருமனது வாடவேண்டுமா?
கவியாடி வறுமைதேடவேண்டுமா?
புவியரசன் யானென்று நிமிர்ந்தபோது,
கவியரசனாக்கிய கண்ணனே ஏன் மறந்தாய்? 101

எனதென்றுநினைப்பதும் உன்னருள் ஒன்றையே
என் துணிவின் மந்திரம் உனதடி ஒற்றியே,
பரம்பொருள் கண்டதினால் பரப்பொருள் பெரிதாமோ?என்
பரம்பொருள் உனதருள் நிழல்தானே! 102

பற்றற்ற வாழ்வில் பற்றுழலும் மேனிப்
படுகின்ற போதில் பாவத்தின் ஏணி,
சுடுகின்ற வினைதன்னில் சொக்கன் மைத்துனன்,
விடுகின்ற உறவாகி விருந்துறவாய் தான் வருவான்! 103

நின்றதெல்லாம் மனத்தில் ஆசையெனும் மாக்கடலே!
கொண்டதெல்லாம் அதனிழலாய் பேராசைப் பெருவெளியே,
மன்றலில் வரும் மாயவனருள் அறியாமல்,
மாயத்தில் விழுந்த மலமனம் மணமாகுமோ? 104

ஆனந்த நடனம் கண்டேன்; ஆதிமூலம் ஆடக்கண்டேன்!
அனந்தனோடு அம்மாவைக்கண்டேன்; அன்பங்கே
கலக்கக்கண்டேன்!
புரியாதப் புதிரைக்கண்டேன்; புனலொடுகனலைக்கண்டேன்!
புன்னகையில் புவியைக்கண்டேன்; புனிதன் தாள் கண்டேன்! 105

நாவற்கனி போன்ற முகமும், அதில் நற்மாணிக்க இதழும்,
வைரமணி அலங்கரிக்கும் வடுமார்பும், அதிலுறையும் திருவும்,
கோமேதகக் காலின் ஒளிசூழும் புவிமுதல்வன் நாரணன்,
அலங்காரம் பாடமுடியுமோ? நன்மனது அவனை மறக்குமோ?
106

யமுனையின் புனலில் ஆடும் குமுத வனப்பில் புதையும்
ஆவோட்டி குழலில் அன்புயிர் தோன்றும் காலம்
அகலிகை உயிர்தந்த இராகவன் புகழ் மாறி
நாரணன் அலங்காரம் நான் மறை வேதம் ஓதும்! 107

கண்ணீர் உப்புப்படிவத்தைக் கால் நிற்கும் மேடையாக்கி,
பக்தரின் அவமானம் உன்னலங்கார திருஷ்டியாக்கி,
ஒருபோதும் உனைநம்பியவன் காக்காமல் மழுப்பிச்சிரித்து,
மன்னனுக்கு மன்னனாய் மாதெய்வமாய் உலாவரும் மாதவா!
108

ஈரேழு பதினாலு லோகங்கள் எங்கேயும்,
பாரேழு பைந்தமிழின் பாட்டொலிச்சங்கிலும்,
பரந்தாமன் கொலுவிருக்கும் செந்தாமரை வீட்டிலும்,
பறக்காத மனமே நீ இருந்தென்ன, இறந்தென்ன? 109

காலிரண்டில் மணிச்சிலம்பு மன்றாடும் -பக்தர்
நெஞ்சதிலே உன்னன்புப்பெருகிப்பெருகிப் புனலோடும்,
நெடுமாலின் திருமார்பில் உய்யும்வழிக்கிடைத்துவிடும்,
நேரமெல்லாம் அலங்காரம் நாரணன் பக்தர் மணியாரம்! 110

வாரணத்தோள்களில் பூரணமானக் கிளியாடும்
செவ்விதழ் முகம்பதித்தேச்சிந்தைக்கவர்ந்துவிடும்
பலபறந்து முடிவில் குழலமறும் நாரணன் பாதத்தில்
நந்நாவற் பழமென நற்கதியில் பாய்ந்துவிடும்! 111

கண்ணன் திருமேனிக் கடலில் கலக்கும் மாந்தர்
பிறவித்தோணி,
எடுக்கின்ற பிறவி எதுவும் கலக்கின்ற ஆறே,- மனது
கலக்கம் கொள்வதும், கண்ணன் அறியாததால் வரும் வினையே,
கல்யாணகோலங்கொண்ட கழல்நாயகன் என் விதிச்சாறே! 112

உலகுயிர் யாவும் அறிந்தும் அறியாமலும்
அவனிலுழன்றே அவனியில் அவன்பேர் சொல்லும்!
தானென்று குதிப்பாரும். தலைமேல் மிதிப்பாரும்
நாரணனையுணராமல் நமன் வாய் விழுவாரே! 113

தங்கமெலாம் ஓர் குழம்பாய் தகதகக்க -பல்
நவரத்னமணிகளெல்லாம் அதில் குழைந்து நெக்குருக
அன்புஎனும் அச்சிலூற்றி ஓருருவம் செய்திட்டால்,
துளசியென தூயமணிச்சுடராய் ஒளிர்ந்திடுவான் நாராயணனே!
114

மின்னலெடுத்து நெருப்பிலூற்றி மேனியிலே சந்தனமும்
சவ்வாதும் மணக்க ஒரு மாயரூபம் புவியில் வந்தால்,
அம்மாவின் பேர்சொல்லி அன்புடனே பூச்சொரிந்தால்
என்புருக எல்லாமும் தருவான் ஒருவன், அவன் நாரணனே, 115

தினமொரு தனமென மனந்தொறும் வருமழையே!
கணமொரு பணமென வினைவிடும் பொருள்வரவே !
மனையொரு குலமென கணையெனும் கழல்வடிவே !
உனையொரு திருவென நினைந்தெழும் உயிரெழிலே! 116

பிணையெனை தனமென அடிதொறும் சேர்ந்தவனே!
வினைதனை பணமென முடிதொறும் அணிந்தவனே!
நிணந்தனைக் குலமென கொள்தொறும் உயிரவனே!
மனந்தனை நிலமென தினந்தரும் திருவருளே! 117

ஒன்று பலவாகி, பலதும் ஒன்றாகி அவ்வொன்றும்
நின்தாளாகி என்னுள்தமிழாகி முளைக்கின்ற கவிதருவே,
உன்னில் பழுத்தபழம் வீணாகுமோ, வீணில் பாறைவீழ்ந்து
விதைகாய்ந்து போகுமோ? என் நாராயணா நீயே என் கதி!
118

சிங்காரரூபனே! சீதளமேகமே!
ஞானவடிவே! என் நற்தவப்பயனே!
கோமுக வேணுகானமே! தீமுக ஊழி யோகமே!
என்றும் எனக்குள் கொலுவிருக்கும் நாரணஞானமே! 119

பலனும்,பயனுமாய் ஆனத்திருப்பெரும் பொருளே!
பகலிரவு எதுவாயினும் அதனின் உயிர்ப்பொருளே!
மரகதக்கலசமே! மாணிக்க வானமே! - நான்
பருகும் ஞானமதுவே!என் நற்சிந்தனைப்பொருளே! 120

கோளவடிவாய் நின்றவொரு அழகுக்குழம்பே!
கோலங்காட்டும் விழிகளில் அன்பின் வரம்பே!
திருமாலையிடை திருமால் திருமார்பிருக்கும் திருமகளுறவு,
எக்காலத்திலும் கிடைக்கா இவ்வுலகின் அடிக்கரும்பு! 121

மின்னல் போல் தாவிவரும் அரக்கன் நினைவு,
அதை யசைத்தசைத்து மணங்காணும் பெருங்கனவு,
உயிர்நெய்யாய் உலாவரும் நாரணதீபம்,-என்னுள்
பயிர் செய்ததெல்லாம் அறத்தின் கலசம்! 122

தனியே நடந்தேன்; தலைக்கனம் கொண்டேன்!
தரணியிலே பொய்சொல்லி மெய்யைச்சாகடித்தேன்!
தாளாத்துன்பம் வந்தபோதே -என்
தயாளன் தாள் நினைந்து அழுதேன்! 123

உயிர்க்கொல்லி எமனெல்லாம் என் குணமே!
உற்றவரும், மற்றவரும் ஏளனம் செய்திடவே,
பற்றுவைத்தேன் பணத்தினிலே, -அதனால்
பற்றிக்கொண்ட தாளிழந்தே தனியனானேன்? 124

ஏதுபடித்தேன்? என்ன நினைத்தேன? -என்
வாழும் வாழ்வெல்லாம் கண்ணனை நினைத்தேன்!
ஆணா லுமாசைவிடாமல் அனுதினமும் பட்டேன்! அவமானியிலே
அவமானப்பல்லக்கில் நானே ஏறினேன்! 125

நெஞ்சம் மந்தம் ; நினைவும் மந்தம்!
உள்ளம் உறங்கும் உணர்வும் மந்தம்!
நடைமுறைமந்தம்! நமச்சிவாயஎண்ணம் மந்தம்!
நான் நாரணன் மறந்ததால் இப்புவியே மந்தம்! 126

உடன் படுக்கையில் துயிலும் பாம்பென ஓர் மனது,
அதுபக்கத்திருந்தே தினம் பணத்தால் கொன்றது!
வாய்மட்டும் நாரணன் சொல்லி, ஆன்மாக்களவாலைதால்,
பேய்க்குணங்கள் என்னில் முளைத்துத்தழைத்தது! 127

எண்ணத்திலி றைவன் நட்டபோதும்
வேரில் நான் ஆசையெரு இட்டதனால்,
இறைவ னுறைந்தே இல்லாமல் போயினன்,
நட்டமரமு மென்னைப் பட்டமரமாக்கிப் போட்டதே! 128

ஐவர் முடக்கி அறுவராய் உட்புகவே,
பொய்யும் விழித்துப் பூங்கனவு எரிந்தது!
பொய், களவு, சூது,கொலை, துரோகம்,மதம்,
அத்தனையும் அண்ணலைவிட்டெனை அடியோடு விரட்டியது!
129

தறிகெட்டு ஓடும் மனமே! தர்மதேவனுக்கெதிராய்,
நீ ஓடியது போதாதா? ஆவி தேடிடும்
அனந்தனை யானடைய நீயொழிந்திடலாகாதா?
அன்புடன் அவனை அணைந்தே மனம் பாடிட முடியாதா?130

நெஞ்சம் மறைத்தேன்! நிதமும் தற்புகழ்ப் பாடினேன்!
கண்டதேக் காட்சியென கொண்டகோலம் கொண்டே,
வாழ்க்கையில் மமதை முடியணிந்தேன் - தினம்
பேயாட்சி செய்து, செய்து பெருமாளை மறந்தேன்! 131

வண்ண வடிவழகன், வானநிறக்கருப்பழகன்,
சொன்னச்சொல்லழகன், சொக்கநாதன் பெருந்தோழன்,
எண்ணமெல்லாம் பாவிவரும் இளையநிலவழகன்,
கன்னமிடும் பக்தியிலேக் கனிச்சாறெனவே வருமழகன்! 132

ஒன்றுமிலாமல் பிறந்தேன்! உலகில்
ஒன்றுமிலாமல் வாழ்ந்தேன்! கலையே
என்றுநீ எனக்குள் வந்தனையோ, அன்றே
அகிலமுள்ளதெல்லாம் ஐய்யன் தாளன்பாய் அடைந்தேன்!133

கடற்கொள் முத்தெடுத்து, பச்சை, மரகதத்தைப்,
பசும்பொடியாய் அதில்குழைத்து, -விடிகாலை
வானவில் தேடிப்பிடித்து, வாழும் உயிரன்பை
ஒருயிர் ஆக்கினால், அவனென் நாரண பாலனே! 134

பொன்னென்றால் அதுஉன் மேனிப்பொன்னே!
நவமணியானாலும் உன் காலடிமணியே,
அழகானாலும் அண்ணலே உன்னழகுதான்,
என்ஆறறிவுக்கண்டப் பேரறிவு அற்புதனே! 135

கண்ணே,மணியே, கவினுறு நிலவே,
பெண்ணே, பெருமதியே, பேரொளியின் சிறு கீற்றே,
சிந்தும் முத்தமெனச் சீறிவரும் பூங்காற்றே,
என்கண்ணன் கைக்குழலே, கனகக்கருமணியே! 136

ஆவின்மேல் கோலோச்சும் அற்புத இசையே,
அன்பின் தாள்வடிவாய் அடிமனத்துறை நிலவே,
தங்கத்தாம்பாளமெனத் தாவிவந்த விண்சூரியனே!
என்னுலகம் நீதானே, மாதவா,கோவிந்தா! 137

பண்ணுகின்ற எதுவும் பைந்தமிழில் உனைத்தானே,
எண்ணுகின்ற சிந்தையும் எம்பிரானுனைப்பற்றித்தானே,
கண்ணும், கருத்துமாய் மனங்கடத்தும் சொர்க்கமே,
மண்ணின் பொன்னாய் மனம் வந்த மணி விளக்கே! 138

தினமொரு செயல், மனமெனும் நிழல்,
கழலொருகுழல், கண்ணெனும் புயல்,
வடிவெனவரும் அழகே! குணம் தருகிற
படியென நிறைநிலவே! ஒளிஉருகிய பிறைநிலவே! 139

கடத்தும் மனந்தன்னில் பக்திக்கடத்துபவனே - நீ
நடத்தும் விந்தையும் நன்னெறி உயிர் செயலே!
என் கசிந்த மனம் கண்ணீரிலுழன்றாலும்,
என் கண்ணப்பனே பொன்னப்பனாவானே! 140

விதியெனும் சட்டைபோட்டேன்! மானிடம்தனில்
வீணிலேக் குதித்து மனம்நொந்தேன்! - ஆணவப்
பேய்கள் அடிவைத்துத் தங்கும் மடமானேன்!
அற்புத ஒளியோய், அடியனைக்காப்பாற்று! 141

தற்புகழ் மகுடஞ்சூட்டி, தான்,தானெனக் குதித்து,
நான்தா னெனும் படகில் நன்றாகப் பயணித்து,
ஊனாசைவைத்து,ஊர்க்கொள்ளையடித்து,
நான் வாழ்ந்தது போதுமே, நாரணா நீ வா! 142

திருவானத்திருவே, திருவேங்கடத்தருவே!
உயிரான எழிலே, உளமென்றப் பொழிலே!
நீருழுது வாழும் அன்னங்கள் போலே,
நீரஉழுத மனது என்னன்பு நெஞ்சே! 143

காராகிக், கருவாகிக், கருவறைவந்த செம்மல்,
பேராகிப், பெயும் மழையுமாகி பெருவெளியில் நின்ற
தென்றல்,
நாராகி, மலராகி, நாள்தோறும் மணக்கின்ற மணமாகி,
நாரணப்பூவேயாகி, நன்னிலம் விழுந்த முத்தே! 144

கலைகொண்ட நெஞ்சில் வந்த களைநீக்கி,
விலையென்று சொன்ன உலகையே விலையாக ஆக்கி,
மலைமேலே இருக்கும் மன்னனைப்பாடுவேன்! - என்
நிலையுயர்த்தும் இடையனில் இன்பமாய்க் கூடுவேன்! 145

மணல்வெளிப்பொன்னாக்கி, மாயத்தில்
அறநெறிவிதைவிதைத்து,நவமணி
நீர்ப்பாய்ச்சி நலமுடன் வளர்ந்தப் பயிரே! - என்
நாரணன் காலடியில் விளைந்தஉயிரே ! 146

ஊரெங்கும் பாவத்தின் கொடிபடரும்,
உலகத்தில் அதன்வேரே நெடிதுயரும்,
ஊழியின் கதிமறந்து நானுயர - நாரணா யிப்
பாவியின் உயிர் உன்னாலே உலகில் பிழைத்திருக்கும்!
147

என்னபாவம் செய்தேனோ, மண்மீதிலே,
எண்ணமுடியாப் பாவம் வந்ததே இந்நாளிலே,
ஆழிசூழ் கடலோனே, அமரனே என் நாரணா! - இன்று
இப்பூதலத்தில் ஒருயிர் வாழ்வதும் உன்னன்பினாலே! 148

பூந்தமிழ் பேசும் சீரடிமாலே ! - உன்
சிந்தையுறைந்த திருவென் தாயே !
எந்தையும் நீயே, என்னருள் வானே! - பிறர்
நிந்தை வராமல் காத்தருள் மாயே! 149

அந்தணக்குலம் யான் பிறக்கவில்லை,
அருந்தமிழ் மறையை அறிந்ததில்லை,
எந்தக்காலத்திலும், எவருமெனக்குப் பக்தியூட்டவில்லை,
சொந்தமென சொல்லாமல் வந்தவனே, நாராயணா! 150

பசிப்பிணிதந்து, உடனருட்பணி தந்தக் கொடையே,
நோய்காட்டி, சேயாக்கிய செவ்வந்திமலரே,
கண்ணனெனும் என் மாயக்கோவே - அனுதினமும்
யான் வணங்கும் நாதமே , நாராயணனே! 151

ஆவிமேல் வந்தமர்ந்த அருளெனும் வண்டே,
உன்வாசம் பட்டதினால் எனக்குள் வந்ததுத் தேனே,
பூவாய் நானானாலும் , வண்டாய் நீ யிருந்தாலும்,
பூரணம் உன்னாலே,புண்ணியமானே! 152

தினமொரு தனமென மனம் வரும் அருங்கலையே!
குணமொரு பணமென தினம் தரும் அருள் வடிவே!
உனையொரு துதிசெய் மனமிருள் நீக்கிடவே
பிணையொரு அன்புயிர் எனதருள் நிலைக்களமே! 153

கண்களிருக்க குருடனாகித்தவிக்கின்றேன்,
கன்னங்குழை வாயிருக்க ஊமையாய் அழுகின்றேன்,
ஐம்புலனும் மாண்டதுபோல் அனல் புழுவாயத்
துடிக்கின்றேன்!
இறைவழியில் உனைக்காணாமல் பாழ் நரகில்
விழுகின்றேன்! 154

இளமைகொண்டக் கிழடும் யானறியவில்லை,
புலமைவந்தத் திமிரும் யானுனரவில்லை,
துன்பப் பெண்ணறியாமல் மருவி,மருவிக், காமமுற்றேன!
இன்பமென வந்தவனை ஏன்மறந்து காயமுற்றேன்! 155

சித்தரும் சீரிளமைத் தவவேள்வியரும்,
பித்தரும் பேரிளமை நவநாயகரும்,
மானுடரும் மற்றும் உயிர்தறித்தப் பல்லுயிரும்,
காணாமல் போன என் கண்ணனைத் தேடுவரோ? 156

உச்சியிலே பழுத்த பழம் உளமறிய தெரிந்தபோதும்,
பிச்சியதைத் திண்ணாமல் பெரும்பசியில் வாடுவதும்,
எச்சிலிலைச் சோறுதிண்ணும் இவ்வுலக தனத்தார் போல்
பச்சிலிலை மருந்தொன்றை பாழ்நோ யார் காண்பதில்லை. 157

எல்லார்க்கும் எல்லாம் தரும் - புவி
நல்லார்க்கு நல்லவரே - தினம்
நான் வணங்கும் நாராயணா - கோடி, கோடி
வணக்கமய்யாக், கும்பிட்டேன் திருத்தாள் பணிந்து! 158

உள்ளெல்லாம் இருப்புண்டு அது காணின்
துள்ளும் அன்பெனவே ஊடுருவும்
எந்தை நாரணன் பாதம் காட்டும் திருவே
கந்தை மனம் நீக்கும் அவன் கழலொளியே! 159

எம்றும் யெனை ஆட்கொண்டு எனக்குள்ளுறைந்தே
அன்றும், இன்றுமாய் அருட்பாதங் காட்டியே,
தன்சேர்த்தத் தங்கமே! தளிரமுதே! என்கண்ணே
மண் வந்த மாநிலவெ! திருவரங்கப் பெருமாளே! 160

*தெருப்பாடகன்.*

ஸ்ரீ நாராயணன் துணை

# ஸ்ரீ நாராயணக் கவசம்

காப்பாற்று, காப்பாற்று!
நாராயணாக் காப்பாற்று!
மூவுலக நாயகாக்காப்பாற்று!
மூன்று தமிழ் வளரவேக் காப்பாற்று!
ஈரேழு பதினாலு லோகங்கள்!
எம்பிரான் அரசாளும் கோலங்கள்!
காணாதக் கனவே , கற்பகமேக் காப்பாற்று!
பூமிதன்னில் பண்ணியப் புண்ணியமேக் காப்பாற்று!
புவிசன்ற துன்பமெல்லாம் போக்கவேக்காப்பாற்று!
தன்னலங்கள் தந்துவிட்டத்,தாபமெல்லாம் நீக்கியே
காப்பாற்று!
எண்ணிலா தெய்வங்கள்
இவ்வுலகில் உண்டு !
பண்ணுகின்ற செயல்களும்
பரந்தாமன் விளையாட்டு!
வினையெல்லாம் விளைத்திடும் துன்பம் !
வீணையின் கீதமென வந்தவனே காப்பாற்று!
மாயவாக் காப்பாற்று !
கோவிந்தாக் காப்பாற்று!
கோபாலா க்காப்பாற்று!
புவிமீது செய்கின்ற காரியங்கள் பலவே !
புண்ணியத்தை மறக்கும், பொய்வாழ்வு அலையே!
கண்ணியக் கண்ணா,
காப்பாற்று!காப்பாற்று!
காதலில் பிறந்த,
கண்ணாநீக் காப்பாற்று!
மதுசூதனாக் காப்பாற்று!
சதுர்புஜிதாக் காப்பாற்று!
சங்கு,சக்கர பாணியேக் காப்பாற்று!
எங்கும் இருள் விரட்டும் எம்பிரானேக் காப்பாற்று!
தங்குபுகழ் தழைக்கச்செய்யும்
தர்மபாலாக் காப்பாற்று!
கொங்குதமிழ் வேந்தேக் காப்பாற்று!
கோலம் பல கொண்ட கொண்டலே காப்பாற்று!
மண்மீது பூத்த விண் தாமரையேக் காப்பாற்று!
என் மீது அன்பு செய்யும் எம்பிரானேக் காப்பாற்று!

ஞாயிற்றின் மூலமே காப்பாற்று!
நாரணதெய்வமேக் காப்பாற்று!
நான்குவேத நாயகனேக் காப்பாற்று!
எண்டிசை தலைவாக் காப்பாற்று!
பூந்தமிழ் ஓசையேக் காப்பா ் று!
புறப்பட்ட தென்றலேக் காப்பாற்று!
நாதபாத கமலமே நாராயணாக் காப்பாற்று!
எனக்குள்ளேப் புகுந்தாளும்,
இன்பவள்ளலேக் காப்பாற்று!
மடல் தாழை மனமேக் காப்பாற்று!
கடல்நிறை செல்வமேக் காப்பாற்று!
கங்குலின் கருணையேக் காப்பாற்று!
சிங்கருபனேக் காப்பாற்று!
சீதளக்காற்றேக் காப்பாற்று!
மண்மீது தவறு பல செய்கின்ற புழு நானே!
மாள்கின்ற வாழ்வு துன்பம் தரும் நாளே!
தார்மீகத் தளமேக் காப்பாற்று!
தர்மத்தின் பிதாவேக் காப்பாற்று!
நோய் போக்க என்னை வந்துக் காப்பாற்று!
தாய்போல அன்பு செய்துக் காப்பாற்று !
தரணியிலே படுந்துன்பம்,
விரைவினிலே போக்கியின்,
வேதனை விலக்கியவனேக் காப்பாற்று!
பணம் பண்ண செய்கின்றத் தந்திரங்கள்
தினம் பலபாவத்தின் பொய் மந்திரங்கள்!
குணம் மாறி பேசிடும் கொலை பாதகங்கள்!
மதம் என்று சொல்லியே மாய்த்திடும் மாரகங்கள்!
அத்தனையும் விளைகின்ற பூமி!
ஆண்டவனைத் திருடி விற்கின்ற ஆசாமி!
இத்தனையின்னலில் உயிர் தரித்தேன் !
இன்பம் ஒன்றுக் காணாமல் தினம் உழைத்தேன்!
கர்மங்கள் யாவும் தர்மங்களா ?
காலங்கள் பாவத்தின் வாசல்களா?
வாழ்வென்ற மரமே, நீ சாயலாமா?
தீயவர் வாழ்ந்தே, சிரித்து நீ மகிழலாமா?
சொல்லியவை மாயை!
சொந்தமெல்லாம் நீயே!
மாயை நீக்கும் மாதாவே காப்பாற்று
கந்தவேல் மாமனேக் காப்பாற்று!
கற்பகத்திருவிளக்கேக் காப்பாற்று!

குன்றாப்புகழேக் காப்பாற்று!
கோவில் திரு சோதியேக்காப்பாற்று!
நீலமேகஜாலமேக் காப்பாற்று!
நீங்கா இன்பமேக் காப்பாற்று!
ஞானவிதையேக் காப்பாற்று!
நாரணத்தெய்வமேக் காப்பாற்று!
புவியாளும் அரசேக் காப்பாற்று!
பூரண நெறியேக் காப்பாற்று!
தமிழ் அருளே காப்பாற்று!
தரணி நிலவே காப்பாற்று!
ஞான,கான, விநோதமே காப்பாற்று!
புன்னகைவேந்தே காப்பாற்று!
பூபாள, கோபால ஞாயிறே காப்பாற்று!
எங்கும், எல்லாமும் நிறைந்த எம்பெருமாளேக் காப்பாற்று!
மங்காப் புகழ் மாணிக்கமேக் காப்பாற்று!
இல் தங்கும் இமயச்செல்வமேக் காப்பாற்று!
மூங்கிலொலி மூலதாரமேக் காப்பாற்று!
மங்கையர் மனத்திலுறை மன்னவாக் காப்பாற்று!
பங்கயப்பாதத்தோனேக் காப்பாற்று!
கறுப்புக்கனகமேக் காப்பாற்று!
காதலெழில் கண்ணேக் காப்பாற்று!
காலங்களின் மூலவாக் காப்பாற்று!
செய்தவறு நீக்கும் செம்மலேக் காப்பாற்று!
செல்வச்சுரங்கமேக் காப்பாற்று!
செந்தழல் அருள்ஒளியேக் காப்பாற்று!
மந்தையென மாடுமேய்த்தோய்க் காப்பாற்று!
கோபியர் கொஞ்சும் ரமணாக் காப்பாற்று!
வரும் சிக்கல் நொறுக்கும் வாமனாக் காப்பாற்று!
பிருந்தாவன பிறை நிலவேக் காப்பாற்று!
பெருமாள் எனும் பெரு நிதியேக் காப்பாற்று!
வறுமைபோக்கும் வள்ளலேக் காப்பாற்று!
வார் நோயறுக்கும், பார் மருந்தேக் காப்பாற்று!
வண்ணத்தோரண விழியேக் காப்பாற்று!
இறைநெறி கொண்ட ஏந்தலேக் காப்பாற்று!
இன்னிசை மழைதரு சூரியாக் காப்பாற்று!
சுந்தர நாயக, அந்தரமனமேக் காப்பாற்று!
அருளுரை ஆண்டவாக் காப்பாற்று!
திருப்பதி பாலகாக் காப்பாற்று!

திருமலைத்தெய்வமேக் காப்பாற்று!
ஞானமலை ஆலவித்தேக் காப்பாற்று!
நல்பொருள் ஒளியுணர்வேக் காப்பாற்று!
நான் மறை வேதமேக் காப்பாற்று!
சொல்மணக்கும் சுந்தரத்தமிழே காப்பாற்று!
கல்விக் குவிந்த கார்மேகமேக் காப்பாற்று!
செல்வமென வந்த திருவின் திருவே காப்பாற்று!
வீரம்விளைந்த ஞானச்செம்மலேக் காப்பாற்று!
பாலைமனத்தில் பால் வார்த்தப் பரமபிதாவேக் காப்பாற்று!
சோலைவாழ் பூமியில் சொர்க்கமாய் வந்தவனேக் காப்பாற்று!
கலியுகத்தில் நலிந்தார் நல் தெய்வமேக் காப்பாற்று!
புலிமேல் அமர்ந்தவனின் தாயேக் காப்பாற்று!
புவிமேல் அமர்ந்த என்னவனேக் காப்பாற்று!
வான்வெளியெழுந்த பெரு நிலவேக் காப்பாற்று!
யான் காண்கின்ற கனவேக் காப்பாற்று!
எவ்வுயிர்க்கும் உயிரான ஏந்தலேக் காப்பாற்று!
பொய்யுலகின் மெய்யேக் காப்பாற்று!
பூமிவாழ் அரங்கநாதகா காப்பாற்று!
புதுப்பாட்டொலி கண்ணன் கைக்குழலேக் காப்பாற்று!
புறஉலகில் தாங்கொணா புண்கள் !
பிற்செயல் எல்லாமே என்னோட கண்கள்!
விதி,மதி, எதுகெட்டாலும் துன்பத்தின் அலைகள்!
சதி,பதி, சயனித்தபோதும் தனித்தனி மனவெளிகள் !
அத்தனையும் வெல்ல,
ஐய்யாவேக் காப்பாற்று!
அருங்குண அரசே காப்பாற்று!
அற்புதத் தென்றலேக் காப்பாற்று!
அனுதினம் நான் வணங்கும், நாராயணாக் காப்பாற்று!

ஸ்ரீ நாராயணன் துணை.

# கருப்புச்சூரியன்

ஒரு சூரியன் கருகிக்கொண்டிருக்கிறான்.
வானம் ஒரு வாந்தியெடுக்க-
மின்மினிகள் மரணசாஸரத்தை நோக்கி - காரணம்
ஒரு சூரியன் கருகிக் கொண்டிருக்கிறான் !
சிலைகள் தகர்க்கப்பட்ட,
சிம்மாசனங்கள் பறிக்கப்பட்ட,
உரிமையில்லாத ராஜாங்கத்தின்
இந்தராஜா, துயரப்பல்லக்கில் உலா வருகிறான்!
இவன் ராஜ்ஜியத்தில்-
காட்சிகள் கண்ணீர்களாயின!
ஆயுதங்கள் அழுது சல்லாபிக்கின்றன!
ஆட்சிபீடமோ நிம்மதியின் காலை நொண்டியாககி-
சுதந்திரமில்லாத ஜனநாயகத்தை
பணமரக்கர்களின் பாதத்தில் காணிக்கையாக்குகின்றன!
சரணங்களும்,பல்லவிகளும் சாக்கடையில்!
சங்கீதக்காரனின் எண்ணங்களின் தொட்டில்கள்,
கசாப்புக்கடைக்காரனின்
ஆடுவெட்டும் கத்திகளில்!
திறமைகள் தெளிக்கப்பட்டது சாக்கடையில்!
சாக்கடைகள் பூக்கடைகளாகி,
பூபாளத்தை முகாரிகளில் முத்தமிடும்!
பாலையின் ஜீவநதிகளாய் இவன் கனவுகள்!
சோலையின் சொந்தமில்லாத வாசனைப்பூக்கள்
காலம் பறித்தக் கசையடிகள்,
இவனின் ஞானப்பரிசுகள்!
ஓலம் ஓங்கரிக்கும்-
ஓசைநயம்மிக்க அவலக்குரல்கள்!
காயம்பட்ட இதயத்தில் ஈர உறக்கம்!
வெப்பமும்சசில் வென்னீர்க் கொப்புளங்கள்?
தாளம்தப்பியப் பாட்டுக்கள்!
தன்னம்பிக்கையில்லா மொட்டை வாழ்த்து அட்டைகள்!
சுயநலக்கூடாரங்களில்
இவன் ஓர் அகவிலைப்படி!
அநாமதேய அரவணைப்பு மேகங்கள்,
கக்கியக் கருப்புக்காற்று மழைகள்!
முட்களே வடிகாலாகும் தப்புகள்.

சுதந்திரம் தேடும் அடிமைப்பல்லக்கு
அற்புதங்கள் அறியாத அடிமுட்டாள் உலகம்!
இவன் தினமும் ஜனிக்கிறான்!
ஜனித்தவுடன் முத்தமிடும்-
நேர மரணங்கள்!
இவன் தினமும் மரணிக்கிறான்!
மரணித்தவுடன் மாண்புதேடும்
கால விரையங்கள்!
தேடுகிறான்!தேடுகிறான்!
அவனையும் சேர்த்து-
மண்ணில் விண்ணைத்தேடுகிறான்!
வெய்யிலில் நிழலைத் தேடுகிறான்!
மழையில் வெறுமையைத் தேடுகிறான்!
காரணம்-
ஒரு கருப்புச்சூரியன் கருகிக்கொண்டிருக்கிறான்!
அழுவதிற்குக்கூட அதிகாரமில்லாத
இந்த கருப்புச்சூரியன்-
கருகிக்கொண்டிருப்பதைக்
காலதேவன் கைகொட்டிப்
பார்த்துக்கொண்டிருக்கிறான்!
இரக்கமில்லாத "மனித" அரசன்
இரண்டுதாடைகிழிய ஓலமிட்டுச்
சிரிக்கிறான்!

பதில் - கடவுளா?
இல்லை
காலமா?

ஸ்ரீ.நாராயணன் துணை.

# பொடிப்பொடியாகட்டும்

என்தாளங்கள் -
எந்தஇடததில் தப்புத்தாளங்களாகின்றன?
என் பாட்டைகளின் நடுவே
யார் தடைக்கல் ஏற்படுத்தியது?
நினைவு தெரிந்த நாளில் இருந்து-
நீ என் கூட வருகிறாயே -
அது பொய்யா?
உன்னை நம்பி என் மான, அவமானங்கள்
இப்படி ஏலம் போடப்படத்தான்
என் சிந்தை உன்னை சிந்தித்ததா?
உன்னை கும்பிட்டக கைகள் முறிக்கப்படுகின்றன!
உன்னை நினைத்துருகிய கண்களில்
துன்பசாகரம்!
எப்போதும என் மூளையில்
உன் தொடர்பு இருந்தும்-
நான் அவமானப்படுகிறேன்......
உன்னை நினைத்துக் - கும்பிட்டு
இதுவரை நான் கண்டபலன்?
துன்பம்...துயரம்...கண்ணீர்...
என்பதைக்கூட
கண்ணீர் தான் குளிப்பாட்டுமா?
என்தர்ம சிந்தனைகளின் பயணம்
சுடுகாட்டு சொர்க்கம் தானா?
குடிகாரனும் -
கூடத்திக் கள்ளனும்-
பணமுதலைகளும் -
வட்டி ராட்சசர்களும் -
பொய்மூட்டை சுமந்து -
புண்ணியத்தை உதைப்பவர்களும்
இன்று ஈட்டி எடுத்து
என்னைக் குத்திப் புண்ணாக்கி
இரணங்களைப்படுத்தி இம்சைபண்ணவா
பாவி நானுன்னை வணங்கினேன்!
எல்லாவற்றிற்கும் ஒரு
எல்லைஉண்டு!
எல்லாவற்றிற்கும் ஒரு
விடியல் உண்டு!
ஆனால்....எனக்கு.... ?
முடிவில்லாத துன்பமும் -

மூர்க்க வாழ்கையும் -
நரகப்போராட்டமும் -
நாராயணா உன்னால்
இதைத்தான் எனக்குத் தரமுடியுமா?
உன்னைப்பற்றி பாடிய பலன் இதுதானா?
உன் கோவிலில் விளக்கேற்றி வைத்தேனே-
அதற்குக்கைமேல் பலன் இதுதானா?
என்நம்பிக்கைகளுக்கு
மரணபயம்பிடித்து
பல ஆண்டுகளாகிறது !
என் தைரிய முடிச்சுக்கள்
தளர்ந்து போய்
பல ஆண்டுகள் ஆகின்றது!
மண்டையில் மயிர்முளைக்குமுன்
நான் உன்னை நினைத்தேன்
மனதில் சிந்தனை வருவதற்கு முன்பே
உன்னை வணங்கினேன்.
இதயம் கிடந்து துடிப்பதையெல்லாம்
உன்அன்பிற்கே என ஏங்கினேன்.
ஆனால் -
ஒருகல்லிடம் கற்பனையும், கனவும் பலிக்குமா?
என்பதை இன்றைக்குச்
சொல்லாமல் செல்லிவிட்டாய்!
உன்னை நம்பி காலத்தை
வீணாக்குவதைவிட -
கொள்ளையடிக்கலாம் !
கொலைசெய்யலாம் !
பஞ்சமாபாதகம்செய்யலாம் !
பத்தினிகளை விற்றுப் பிழைக்கலாம் !
காரணம் -
இதையெல்லாம் எவன்செய்வானோ?
அவனுக்கு உன்ராஜ்ஜியத்தில் -
என்ன தண்டனையோ ?
அதையெல்லாம் -
உன்னை நினைத்ததினால்
நான் பெற்று, பெரும் புகழ் அடைந்து விட்டேன்.
எனக்குள் ரத்தக்குளங்களை
நீயே வெட்டினாய் !
எனக்குள் தீயிட்டு
துடிக்கவைத்தவனும் நீயே !
விதி சதியென்று பழிசொல்லி
நான் திரும்பவும் முட்டாளாக தயாரில்லை !

நீயிருப்பதுன்மையானால் -
சத்தியமாய் நான் நினைத்தது
உண்மை கலப்பில்லாத உண்மையானால்
இந்தக்கவிதைகளின்
இரணங்களில் இனி இந்நேரம்
துடித்திருப்பாய் !
உன்சன்னதிகள் இனி
இருண்டுபோகட்டும் !
உன் அருட்கள் எல்லாம் வட்டிவாங்குபவரிடம்
வயிறு வளர்க்கட்டும் !
உன் இறைத்தன்மை
இன்றே இற்றுப்போகட்டும் !
ஒரு பாமரனின் சாபம்
பலிக்கட்டும்!
பரந்தாமன் சக்கரம்
அக்கிரமகாரர்களின்
வால்பிடிக்கட்டும் !
இந்தபூமியில் -
இருக்கும் கொஞ்சநெஞ்ச ஆன்மீகமும்
இனியில்லாமல் போகட்டும்!
பக்தி என்பது இல்லாமல்
உலகில் நாத்திகம் தழைக்கட்டும் !
என்போன்ற ஏமாளிகள்
இனிமேலாவது புத்திவந்து
உன்னைநம்பாமல்
உழைப்பை நம்பட்டும் !
உலகத்தின் அத்தனைப்பாவங்களும்
உன்தலைமேல் விடியட்டும் !
எங்கள் கனவுகளைப்போல் -
எங்கள் வாழ்க்கையைப்போல் -
உன் கோவில்களெல்லாம்
இடிந்துப் பொடிப்பொடியாகட்டும் !
பொடிப்பொடியாகட்டும் !

*-தெருப்பாடகன்.........*

குறிப்பு:- தன் அன்பினால் இந்தக் கவிதையை நாராயணன் பொய்யாக்கி விட்டதே உண்மை. இப்படி எழுதிய தெருப்பாடகனையே ஸ்ரீ.நாராயண அலங்காரம், ஸ்ரீ நாராயண கவசம் எழுதிப்பேர்வாங்க வைப்பவனும் நாராயணனே. சகலம் ஸ்ரீ நாராயணார்ப்பணம்

மங்களம்! மங்களம்!!
ஸ்ரீ நாராயண சர்வமங்களம்!!!

## நூலாக வரவேண்டிய தெருப்பாடகனின்
## திருப்பாடல்கள்

1. திரு நாராயண அந்தாதி - 1009 பாடல்கள்
2. தெருப்பாடகன் - காவியநூல்
3. விடுதலை - காவியநூல்
4. திருநாராயண அலங்காரம் - 1009 பாடல்கள்

## தனிக்கவிதைகள்

| | |
|---|---|
| 1. கனவுப் பாலங்கள் | - 50 கவிதைகள் |
| 2. பாதிப்புகள் | - 28 கவிதைகள் |
| 3. பஞ்சாரைகள் | -36 கவிதைகள் |
| 4. மனவேள்வி | - 39 கவிதைகள் |
| 5. வியப்புகள் | - 28 கவிதைகள் |
| 6. சூரியக் குஞ்சுகள் | - 38 கவிதைகள் |
| 7. ஆத்ம சோதனைகள் | - 46 கவிதைகள் |
| 8. ஈட்டி முனைகள் | - 51 கவிதைகள் |
| 9. பாசத் திட்டுகள் | - 34 கவிதைகள் |
| 10. பாவைகள் | - 39 கவிதைகள் |
| 11. கவிக்கதம்பம் | - 50 கவிதைகள் |
| 12. தெருப்பாடகனின் நாட்டுப்புறப்பாடல்கள் | - 50 கவிதைகள் |
| 13. மழையின் தாகம் | - 31 கவிதைகள் |
| 14 முற்றமா? முத்தமா? | - 29 கவிதைகள் |
| 15. மு.ப.க.வின் முத்தாரப் பாடல்கள் | - 20 கவிதைகள் |
| 16. மனித முடிச்சுக்கள் | - 40 கவிதைகள் |
| 17. என் அப்பாவின் தேவதை | - 37 கவிதைகள் |
| 18. தாயே, தமிழே வணக்கம் | - 50 கவிதைகள் |

திரைக்கு வராத திரை இசைப்பாடல்கள் - 2000
தொலைக்காட்சி 13 எபிசோட்டுகள்
"எண்ணங்கள் மாறலாம்"
நாவல் : "இருட்டின வெளிச்சங்கள்"
"புகைக் குயில்கள்"

## ரேடியோ நாடகங்கள்

சென்னை கிறிஸ்தவக் கலைக்கழகத் தொடர்பு நிலையத்தால் பீபாஸ்டேஷனில் ஒலிபரப்பப்பட்ட 150 நாடகங்கள்.

சென்னை சாந்தோம் கிறிஷஸ்தவக் கலைக்கழகத் தொடர்பு ஒலிபரப்பிய 100 நாடகங்கள்.

இதயம் பேசுகிறது ஆசிரியர் மறைந்த திரு. மணியன் அவர்களால் ஒலிபரப்பப்பட்ட ஒலிநாடா வடிவ தெருப்பாடகனின் " முகாரி முத்தங்கள்"



உத்தமன் ஆட்சி ஒருநாள் மலர்ந்துவிடும் - புவி
மொத்தமும் சாட்சி அவனருள் கூடிவிடும!
எத்தர்கள் கூச்சல் இமயத்தை என்னசெய்யும் ? - இந்த
எம்.ஜி.ஆர். பித்தர்கள் உயரத்தை யாரே தாண்ட முடியும் ?
சத்தியநாதன் வீரப்பன் ஆணை ஏழையைத் தூக்கிவிடும்!- நம்
கழகத்தின் வீரன், கருணையின் நிழலே உலகே பாடிவிடும்!

-தெருப்பாடகன்.

விலை ரூ.36/-

